உ

கணபதிதுணை.

# சவுந்தரியந்தாதி.

சோம்பட்டு

## பவழக்கொடி-சுவாமிகள்

அருளிச்செய்தது.

இஃது

திருவாவடுதுறையாதினவித்துவானாகிய ஆ தொண்டமண்டலம் அறுநான்குகோட்டங்களிலேமுதனான்காவதாகிய மணவூர்க்கோட்டம்

## சோமசுந்தரமுதலியாரால்

பழுதறவாராயப்பட்டுச்

சிந்தாத்திரிப்பேட்டை மரத்தொட்டி

அனுக்காவூர்

தாண்டவராயமுதலியார்

குமாரர்

## ஏகாம்பரமுதலியாராலும்

எழுமூரிலிருக்கும் குறட்டூர் குள்ளப்பமுதலியார்

குமாரர்

## கணபதிமுதலியாராலும்

சென்னைக்கல்விச்சங்கத்துத்

தமிழ்ப்புலவர்

## திரு-வேங்கடாசலமுதலியாரது

சரஸ்வதி அச்சுக்கூடத்திற்பதிப்பிக்கப்பட்டது.

சாலிவாகனசகாப்தம்-௲௭௱௬௰௨-விகாரிஸு புரட்டாசிமீ

இதன்விலை-அணா-௪.

1839-1840

# விளம்பரம்.

இதனடியிற்கண்டிருக்கிற அச்சிற்பதிப்பித்தான புத்தகங்கள் வேண்டியவர்கள்வாங்கிக்கொள்ளுகிறஇடங்களும் புத்தகத்தின்பெயர்களும்.

சிந்தாத்திரிப்பேட்டையில் அணைக்கரை ரோட்டுத்தெருவிலிருக்கும் மாத்தொட்டிகளிலமேலண்டைவாடையில் அனுக்காலூர் தாண்டவராயமுதலியார் தொட்டியில் ஷையார் குமாரர் ஏகாம்பர முதலியாரிடத்தில் இதுகள்வாங்கிக்கொள்ளலாம்.

அணா.

கெவுளிநூல் .......... ௬
சகுனநூல் ................ உ
சச்சிதானந்தவிளக்கம் ........ ௫
சாரப்பிரபந்தம் ............. உ
சைதாபுரமாலை ............. ௪
இருசொல்லலங்காரம். ....
முச்சொல்லலங்காரம். .... } உ
கௌரிபஞ்சாங்கம், ஈஸ்வர பஞ்சாங்கம், கழுதைகாதல், ஆந்தைகாதல், கெவுளிகாதல், காகங்கரைதல், பல்லிவிழுதல் புத்தகவகராதி இந்த-எஇம்- } ௫
சீட்டுக்கவிகள் ............... ௪
வேல்விருத்தம். மயில்விருத்தம். .... உ௦

எழுமூரில் சின்னசெட்டித்தெருவிலிருக்கும் குறட்டூர்குள்ளப்ப முதலியார்குமாரர் கணபதிமுதலியாரிடத்திலும் வாங்கிக்கொள்ளலாம்.

ரூ. அணா.

அருணகிரிநாதர்திருப்புகழ். க ,,
நொண்டிநாடகம் ............ ௰
அவிவேகபூரணகுருகதை....... ௰
பட்டணத்தார்புலம்பல்........ ௮
தண்டலையார்சதகம் ......... ௪
சீட்டுக்கவிகள் .............. ௪
நமச்சிவாயமாலை ............ ௫
மீனாக்ஷியம்மன் கலிவெண்பா... ௫
கேதாரிநாதர்கதை ........... ௫
வராகிமாலை ................ உ
திருத்தணிகைச்சுப்பிர...
மணியர்விருத்தம் ...... } கஉ
சுப்பிரமணியர் ஆசிரியவிருத்தம். க

இன்னம்வேண்டிய பலவிதபுத்தகங்களும் வாங்கிக்கொள்ளலாம்.

இப்போது அச்சிற்பதிப்பித்து வருகிறவைகள்.

ஸ்ரீகிருஷ்ணபகவான் தூது மூலமும் உரையும்.
கையெழுத்துப்பண்ணவர்களுககுவிலை ரூ. கஉ
கைவிலைக்கு வாங்குகிறவர்களுக்கு விலை ரூ. உவ
நளச்சக்கிரவர்த்திகதை விலை ....... ரூ. க௩

இனிபதிப்பிக்கப்படுவன.

மீனாக்ஷியம்மைதிருப்புகழ், சிவவாக்கியர்பாடல்கள், வடிவுடை அம்மன்பிள்ளைத்தமிழ், தில்லைக்கலம்பகம், அரங்கமகத்துவம், தம்பிரியும்பெருமாள்கதை, மகதியுள்ளான், ஞானவெட்டியான்,

சிவமயம்

# சவுந்தரியந்தாதி.



## காப்பு.

### எண்சீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்

முத்தியளித்திடுங்கரிமாமுகனேயுன்றன் *
முண்டகத்தாள்பணிந்தேத்திமொழிவதாகுஞ் *
சத்திதிரிபுரைகௌரியுமையாண்ஞானத் *
தனிவாழ்வுதருமாறுசாற்றுமாலை *
சித்திதருமந்தாதிசிறப்பாநாயேன் *
சிந்தனையைமுடிக்குமருள்செய்வாயென்றன் *
புத்தியருள்விளக்கமிகும்போதநாத *
பொன்னடியையுன்னடியைப்புகழுமா றே.

எழுசீர்க்கழிநெடில்

பொன்னிதழ்பரந்தமலர்கொன்றைமுடியின்சடிலர் *
போதகிகபோகமயிலே *
வன்னியிலெழுந்தவொளிமின்னலெனநுண்ணிடை *
வளைந்தொழுகுவஞ்சிமணியே *
யுன்னரியஞானவொளியேவெளியின்மேவுமொரு *
வோதிமநலங்கொளுமையே *
யென்னரியதந்தையையெழுந்தருள்கவென்றரு *
ளிரங்கினையரம்பையரசே (க)

அறுசீர்க்கழிநெடில்

அரசர்தம்பிராளுமிமால்பங்கயனக்கினிநுதற்கண்ணன் *
சிரசுபூண்டருள்சேவடிக்கமலத்தின்செல்வியேசேனார்ந்த *
வரையிலேபிறந்தருளியமனேன்மணிமகேஸ்வரிமதிசூடி *
யுரையுணர்ச்சியுமிறந்தவர்க்கருளியவொளிவிளக்கணையாளே (உ)

எழுசீர்க்கழிநெடில்

ஆளுமையனைநாளுமம்பலமாடிடும்படிநாடியே *
கோளுறுஞ்சிவஞானரஞ்சிதகோகிலம்பயில்வாகினி *
தாளுமம்புயமேலமர்ந்திடுதானகம்புகன்ஞானமே *
தோளுறுங்கழையேர்பசுங்கிளிதோகையம்பிகைபாகமே (ங)

பாகங்கலந்தமணியாகஞ்சிவந்தமுழுநீறுந்துலங்குபரமன் *
முகந்தவிர்ந்தவிதழூறுஞ்சலம்புளகசாரஞ்சொரிந்தகுயிலே [யே
பூகஞ்சிறந்தகனிமேயாகந்தொலைந்தவர்கள்போதந்தெரிந்தவிழி
மேகம்புகுந்தகுழன்மாதங்கியெங்கள்சிரமேவுஞ்செழுங்கமலையே

அறுசீர்க்கழிநெடில் (ச)

கமலக்கண்ணனுநான்முகனுடிக்கதறிக்காணுணாத் *
தமதுட்பாகமதாகத்தவமுயல்சதுரித்தாய்மாதே *
யெமதுட்பாதசரோருகம்வைத்தினியாளாய்கோமாதே *
யமலித்தூளணியாரணிபூரணியருளுற்ருள்வாயே (ரு)

வாயாரச்சொலிவீழ்வாரைப்பதம்வாழ்வாயப்பாவென் *
றேயாநித்தியஞானசத்தியுனார்வாழ்விப்பாயே *
சேயாய்வைத்தெனையாளாயுத்தமிசீர்பாதத்தேனை *
நீயாரப்புரிநாயேனைச்சிவனேரோயுந்ருளே (சா)

எழுசீர்க்கழிநெடில்

உத்தமிபத்தினிசர்க்குணிநித்தியவொப்பிலருட்கொடியோதா தே
பித்தனெனப்புவியுற்றமயக்குறுபிச்சையொழித்தருண்மாதா வே
நித்தனையத்தனைமுத்தனைநத்தியநிட்டையளித்தருணீமாதே *
சித்தினிபத்மினியத்தினிசங்கினிசிற்றடியிட்டருண்மாணோ (எ)

அறுசீர்க்கழிநெடில்

மான்போல்விழியுமிளம்பிறைபோல்வயங்குநுதலுங்கனிவாயுந் *
தேன்போன்மொழியுஞ்சிற்றிடையுஞ்செம்பட்டுடையுந்திருக்கழுத்
தும், வான்போலிருண்டமயிர்க்குழையுமணிச்செப்பெனவேகன
தனமுந், தான்போலுவமைசாற்றரியவுமையேசரணந்தருவா யே

எழுசீர்க்கழிநெடில் (அ)

தருவாயயனுந்திருமாலுணராதருள்செங்கமலச்சரணின்றே *
யொருமாமனதாயுறவாயுருகாதுணையாதவமேயுழலுற்றேன் *
திருமாமறையேபொருளேசுவையேசிவனுரிடமங்கலவாழ்வே *
யிருமாமலமேபரிபூரணமேயெமையாள்பதமேயுமையாளே (கூ)

அறுசீர்க்கழிநெடில்

உமையேமூலத்துறைந்தபொருளுணர்ந்தேசுழியின்முனைதிறந் து
விமையோரறியவரிதாகுமெந்தாயுனதுபதங்கருதி *
[illegible]மையாநாட்டத்துடன்காலைநீட்டிமுடக்கிநிலைபுகுந்து *
[illegible]யேயுணருந்தரமருளுந்தாயேயமலன்றனிவாழ்வே (ய)

வாழ்வேவாழ்வைமறந்திருந்துமகிழ்ந்தேகளிக்கவரும்வாழ்வே *
சூழ்வினையைப்போன்றுமலங்குளித்தேகிடக்குங்கொடியேனைத் *
தாழ்வேயகலுஞ்சிவஞானச்சரணங்கொடுக்கவெழுந்தருளாய் *
மர்வேழத்தின்றிருக்கோட்டுமுலையாயுதித்தமலையாளே (௧௧)

மலையிற்பிறந்துசிவஞானமடுவிற்குளித்துச்சிவனிடமாய் *
நிலையைப்பதிந்துயாவருக்குநீயேதாயாய்நிறைந்ததனைத் *
தலைவைத்தறிவாலுணராதுதாயேகிடந்துதயங்குகின்றேன் *
கொலைவைத்துழலுங்கொடும்பாவியடியேனம்மைக்குறைதீ ரோ (௧௨)

குறைதீரும்பொருளிறையோனும்புகல்குணமேயுன்செவியா *
னிறையாரும்படிவினவாவெங்கணுநிகழாவுய்ந்திடுவார் *
மறையோதுங்கலைமகளேசெந்திருமகளேயம்பிகையே *
முறையோவென்றுயரறவோசங்கரிமுனியாதுந்தயவோ (௧௩)

எழுசீர்க்கழிநெடில்

ஓமென்றுரைத்தபொருளாமென்றுணர்த்தியதுவுமென்றிருத்தி ய
தென்று, சேமந்திறக்கவருவாயென்சிரத்திலுறுசீர்வந்தபொற்கம
லமே, நாமந்தரித்தசிவயோகந்தழைத்தகொடிநாதந்தொனித்தந
டமே, வாமந்தரித்தபரபோகஞ்சுகித்தமணிமாதங்கிசத்திமயி லே (௧௪)

அறுசீர்க்கழிநெடில்

மயில்போன்றிருக்குந்திருமேனிமறையோகுயிலோமறைமு டி
வோ, வயில்போன்றிருகணருங்கணையோவருளார்கடலோயாதுரை
க்கேன், வெயிலோநிலவோசோதிமின்னல்விளைவோககனவிற்று
றே, பயில்வோருனதுதிருவழகையுமையேதொகுத்துப்பாடரிதே (௧௫)

எழுசீர்க்கழிநெடில்

பாடல்விண்ணவரோதமாதவர்பத்திவைத்தடிதாழவே *
யாடல்கொண்டிடுமத்தனாரருளாடல்கண்டிடுமம்மையே *
வாடலுந்தழைவாகலும்பெருவாழ்வைநம்பியமாய்கையுந் *
தேடலுஞ்சிவநாடலுந்தவிர்தேவியென்குறைதீரவே (௧௬)

தீராதவினைமுழுதுமோராதகொலைகளவுதீயாகவெந்தொழியவே *
வாராதவழியுதவுமாமாயிறோகைமயில்வாராகிசூலிகௌரி *
யோராதபுல்லறிவிலீராதபோதனையையோதாமலோதவருவாய் *
நாராயணன்பிறவியோடேபிறந்துசிவனோகலந்தவமுதே (௧௭)

அறுசீர்க்கழிநெடில்

அமுதமுகுத்திடுதமணியவட்டகையனையமுலைத்திருவே *
யெமதுகருத்துறவெழுதியசித்திரவிதுவெனவுற்றருள்வாய் *
குமுதநகைச்சியரழகையெடுத்தொருகொடியைவகுத்தனையா *
யுமதுகருத்துறுமகிமையெவர்க்கிதுவுவமையெனத்தெளிவார் (௧௮

தெளிவாயமுதப்பெருக்கெறிந்துதேங்குகடலிற்றினமூழ்கி *
யொளிவாய்த்திருக்குங்கனகசபைக்குள்ளேபுகுந்துவுமையேயுன் *
களிவாய்த்திருக்குங்கணவனுடன்கனகத்தவிசின்வீற்றிருந்த *
வளிவாய்த்துருகுங்காட்சிமங்கைக்கரசேகாண்டற்கருள்வாயே (௧௯

அருள்வாயாறுதலங்கடந்தவருட்பேரொளிக்கேயருகழைத்துப் *
பொருள்வாயிதுநீதெளிவாயென்புதல்வாவெனவோர்புத்தி சொல்
வா,யிருள்வாய்மடுத்துக்கிடந்துழைத்தேனெனையாளுடையவென்
றாயே, தெருள்வாய்மனதாயுணராதசிவமேகலந்தசெழுந்தேனே
எழுசீர்க்கழிநெடில் (௨௰)
தேனேபூவேகாயேகனியேதிருவேயருவேயுருவேயென் *
னூனேயுடலேயுயிரேயுயிருக்குயிரேயருளுக்கொருவேரே *
வானேநிலனேவளியேகனலேமழையேயொழியாவரமேயென் *
கோனேகுருவேகுறைதீரமுதேயெனையாளரசன்குடிவாழ்வே(௨௧
அறுசீர்க்கழிநெடில்
வாழ்வைப்புகழ்ந்துபெருவாழ்வைத்துறந்தமதமாய்கைப்பிணங் க
டையனேன், றாழ்வைச்சிறந்ததிருநீறைப்புனைந்துருகுதாளைத் தி ற
ந்தருளுவா, யூழ்வைப்பெனுங்குறையைநீமுற்றுகந்தருளுமோம
ச்சடங்கிலுறைவா, யேழ்வெற்பினும்பெரியதாகத்திரண்டமுலையே
ழைக்கிரங்குமமுதே (௨௨)
அமுதம்பிஞ்சிளமதியின்செஞ்சடையரனுங்கொஞ்சியபோ *
துமிழுஞ்செஞ்சுடருதையங்கொண்டெழுமுலையங்கொங்கைகண்
கமழுஞ்சந்தனமொழுகுங்கைகொடுதழுவுங்கஞ்சனியே [மேற்
திமிதங்கொண்டெழுநடனஞ்செந்திருவுருகுஞ்சித்தனையே (௨௩)

சிந்தனைக்கரியதொருவந்தனைக்குரியமயில்சிந்துரக்களபமுலையே *
பந்தடித்திடுபொழுதினெந்துகைச்சிறுவிரல்கள்பஞ்சலக்கணமுடி
யினூர், வந்துநித்திலமுதிரநொந்திளைத்தனைவருகமங்கையர்க்கரசி
பெ[illegible]வே, சுந்தரக்கமலமுறுசெந்திருக்கழல்வருடுசுந்தரக்கலப ம
யிலே. (௨௪)

பதினான்குசீர்க்கழிநெடில்

மயிலினழகுபசியவிலையுன்வடிவுபுகலுமொருவரோ *
மணவன்முடியிலிலகுமதியையவதனநுதல்செய்வரைமையாய் *
குயிலையமுதைமழலைகுழலையிமையவடிவுகொளுமொழிக் *
குமரிபரமிசிறுமிகிழவிகுழவிகுதலைமதலையே *
யயிலையுழையையளியைவெகுளுமரிவைவிழிகள்பொருவுமே *
யமலனயனுமரியுமறியவரியசயனமௌனியே *
பயிலுமடியர்மனதுகுறைகள்பகலுமகலுபதமுளே *
பதியுமெனதுசிறுமைதவிரும்பரமசரிதவிரதியே (உரு)

அறுசீர்க்கழிநெடில்

விரதம்பயிலுஞ்சிறுவிதிமுன்வேள்விக்கிறையோன்விடைகொண்டு
வரமங்கையருக்கரசேநீயந்நாளரனைப்பிரிந்தன்றோ *
விரவும்பகலுமில்லாதவிடத்தேசிவனுமிருக்கின்றா *
னரவின்பணியுங்கலைமதியுந்தரித்தாற்குன்னையலதுளவோ (உசா)

எழுசீர்க்கழிநெடில்

உளமுங்கசிந்துருகியுனையுங்குழன்றுளறியுடலுங்கிடந்துபுளகக் *
களமுங்கருங்கனிகொள்பவளந்தயங்குபுயகணவன்கலந்தவலமும் *
புளகம்புரிந்தமுலையளகம்புனைந்தமலர்புழுகுங்கலந்துதிரவே *
மளவெண்டையங்களொலிதருநந்தியின்கடிதுவருமென்றவங்களுள
தோ (உஎ)

உளதோவிலதோவுருவோவருவோவுறவோபகையோவுளதொ ந்
தோ, களவோகனவோமனமோவெனுமென்கபடங்களை நீகளைவா
யே, கிளையேதமரோயெனையாளரசேகிருபாகரியேபெருவாழ்வே
விளைவேவிதையேநிலமேசலமேவிரகேசிரகாரணவீடே (உஅ)

வீட்டைத்திறந்துநாட்டத்திலேறிவேட்டைச்சுணங்கையடி கோ
லாற், காட்டைத்துணிந்துமூட்டிக்கனிந்தகாற்றைத்திணிந்தகுழலா
து, கோட்டைக்குள்வெந்தநீற்றைப்புனைந்துகூத்துப்புரிந்தகுரு
வேயென், றேட்டத்தில்வந்துபார்த்துக்கனிந்துமோட்சத்திலெ
ன்னையுடையாளே (உகூ)

கலித்துறை

ஆட்கொண்டாய்நீயரனேயருளேயாலுலே *
தாட்கொண்டோடிவாராய்தாராய்தாய்போலே *
வேட்கொன்றோவாரார்மாதேவேறேநீ *
கேட்குந்தாயேநாயேனுசைக்கிறையோனே (௩௰)

எண்சீர்க்கழிநெடில்

இறையவனையுற்றமுத்திதேறும்வகையினியதவமுற்றபத்தர் தேவி
யுனை, நிறைமலர்பரப்பிவைத்துநாளுமுனைநெடியதுதிபத்திவைத்
தநேயமுடன், மறைமுடிவினுற்றசத்திபாதம்வரவழிவழிதுறக்கமு
த்தியாகியது, சிறைமயிலையொத்தபச்சைமேனிதனில்சிவனையொரு
பக்கம்வைத்தசேயிழையே. (௫௧)

அறுசீர்க்கழிநெடில்

இழைநுழையாதிடையழகுறுபூண்முலையிளவெயின்மேனியிலே *
நிழலுறுசாமரைமணிவடமாடியநிலவெழுபூதியினுள் *
கழைபெறுதோளியையழகொழுகாநிறைகருணையினாரமுதைத் *
தொழுமவரோசிவனடியவர்காணிதுசுருதியினுலுரையே (௫௨)

எழுசீர்க்கழிநெடில்

உரையிறந்துவுணர்விறந்துவுலவுமாயையுற்றதோர் *
திரையிறந்துகாணநின்றதேசியெந்ததேசியோ *
பரைசிறந்தஞானமேபரிப்பதென்றபத்தரோ *
யிரையிறந்தசிந்தையாகியென்றுதாயைநம்புவேன் (௫௩)

அறுசீர்க்கழிநெடில்

நம்பியவடியார்கட்குநாரணன்காணுமுத்தி *
சொம்பிதத்துடனேதந்ததுரா துரைக்கரியசோதி . *
யம்பிகைபரமிலோகநாயகியரற்குமுன்னே *
கம்பிதபுரகஞ்செய்யக்கண்டலோகாணுமுத்தி (௫௪)

அறுசீர்க்கழிநெடில்

முத்தியளித்திடுசெட்டுவவட்டகைமுக்கியமுக்கியமே *
நத்தியுரைப்பவர்சத்தினிமெய்ப்பதநற்சாமுற்றவரோ *
பத்தினிநித்தியமுத்தியளித்தருள்பத்மினிசர்க்குணியே *
சித்திரத்தொழுசித்தியையுற்றிடுசித்துருவக்குயிலே (௫௫)

எழுசீர்க்கழிநெடில்

குயிலைப்பழித்தமொழியயிலைத்தெழித்தவிழிகுவியப்பருத்தமு லை
யாள், கயிலைப்பொருப்புறையுமயிலைக்கருத்திலுறுகலையைத்தரித்
தநிலையை, துயிலைக்கழித்தினியதுயிலைப்பதித்தரியதுயரைத்தொலை
க்கவறியாய், வெயிலைச்சிரித்தபிறவியைவிட்டெடுப்பதெவர்வினை
யைத்தரித்தமனமே (௫௬)

அறுசீர்க்கழிநெடில்

ம[illegible]மேசினமேவளிகனலேமண்ணேவிண்ணேமறுசலமே *
ஞனமேலறிவேபகையுறவேகண்ணேயொளியேகனவெளியே *

தனமேயமுதசராசரங்கட்கெல்லாந்தாயாய்த்தழைத்தோங்கும் *
வனமேபிறவிக்கடல்கடக்கவந்தேயுதவுமரக்கலமே (௩எ)

எழுசீர்க்கழிநெடில்

கலவுமியருந்துழிக்கவுள்வந்துசிக்குமென்கதையதைக்கைப் பிடித்துன், னிலவுபுகழ்சாகரப்பெருவெள்ளமெவ்வரவுநீசிறிதுணக்கவந்தான், மலவிருளறுக்குமென்மாயையும்போமுனதுமலரடிகிடைக்குமன்றோ, வலகிலர்ஞானவானந்தகுருபீடமென்னரசிளங்குமரியரசே (௩அ)

அறுசீர்க்கழிநெடில்

அரைசராறுவீடடைந்துமேற்கண்டிடவரியதோரானந்தங் *
கரைகடந்தபேரொளிவெளியிருத்தியகாரணம்பலித்தன்றோ *
திரைகடந்ததுமாய்கையுமலங்களுந்தேய்ந்ததுசெயலெல்லாம் *
புரைவறும்பதங்கிடைத்ததுபரம்பரிபொய்யிலாமெய்வாழ் வே.

எழுசீர்க்கழிநெடில் (௩௯)

வாழ்பூதகணமாடவாய்நெருப்பெரியபேய்வன்கைகள்கொட்டியாடும், பாழிதின்டோளலகைகைத்தாளமெற்றவுயர்பரதநாடகமாடினோன், சூழ்பித்தமானதொருகமலன்சிரத்தினுற்றோகையதுமாற்றுவித்தா, யாழ்கடல்விடத்தையமுதாகவரனுண்டதென்னம்மையுன்கைத்திறமையே (௪0)

எழுசீர்க்கழிநெடில்

திறமையுற்றிடுதம்பிறையவற்குனதுதிருமலர்க்கரமின்மாலையா *
னிறைதவத்தினெடுபிறவியற்றொருவனிருமலக்கடவுணிருபரோ *
குறைவறப்பெருமைவரவரப்பரமகுருவெனத்திருவுமுடையனே *
முறைமுறைப்பிறவியறுகமுத்தருனைமுதல்வழுத்துமவர்பது மையே (௪க)

அறுசீர்க்கழிநெடில்

பதுமமலராளடிபரவும்பங்கேருகத்தாள்பணிந்தரனுர் *
நிதமுந்துடைக்குந்தொழில்பெற்றூர்நெடியோனளிக்குநிலை பெற்றான், சதுமாமுகனுஞ்சராசரங்கள்படைத்தானென்றேசாற்றுமறையதனுளுனதுதிருவருளையல்லாதுளவோவம்பிகையே (௪உ)

அம்பிகையுனதுசேமத்தரும்பொருள்புகழ்ந்தஞானித் *
தம்பிரானடியைச்சாருந்தவங்களாலுவங்கள்செய்தார் *
வம்பனேனவங்கள்கொண்டுவாழ்த்துதற்கிரங்குமாறு *
எம்பிரான்முடிமேற்கொன்றையெருக்குடனிருக்குமாபோல் (௪௩

போதிலயன்றொழுமானேயுன்பூரணசந்திரமாமோக *
நுதிமுகங்குளிர்வாழ்வாலேஞானமெனும்பொருளுடாயோ, *

வோதிமமென்னடைமாதாவேயோதுவனென்பிழையாராயே *
யாதிசவுந்தரிமாமோகியாயிமதங்கிசடாதாரி (சச)

ஆதாரமாறுமும்மண்டலங்களவையேகடந்தசைவையே *
நாதாவுநீயுமொன்றாகிநின்றஞானஞ்சுகங்கடாறு. *
யோதாதிருந்துவுளமேகசிந்துவுருசாவரங்களுதவாய் *
மாதாமுகுந்தனிளையாயனந்தமாயாமதங்கிவடிவே (சரு)

எழுசீர்க்கழிநெடில்

வடிவமுறுசடைமௌலியடியருளநடனமிடுவரதனிடமுடைய மணி
யே, கடிகமழுமடியிணைகள்கலகலெனநெகிழியணிகனகவளையளை
யன்மயிலே, துடியிடையுமிளமுலையுமணிவடமுமிருவிழிகள்சுரிகு
ழலையயிகளுமழகுங், குடிமருவுமெனதுமனநொடியளவிலெனை
தரியகுறைதவிருமருள்புரியுமே (சசா)

அறுசீர்க்கழிநெடில்

புரியுந்தொழிலுமூலத்திற்பொங்குஞ்சலதிப்பெருங்கடலைக் *
கரிகொண்டரியகனலெழுப்புங்காற்றும்புகுந்துகளங்கயல *
மெரியுஞ்சுழிணைத்தடமேறியீசன்றிருத்தாளிணையடைந்து *
துரியங்கடந்தபெருவெளிக்கேதுஞ்சத்தருவாய்துணைமாதே (சஎ)

எழுசீர்க்கழிநெடில்

மாதுநின்கருணைஞானநித்திரைசெய்மஞ்சநாலுநிலைகால்களும் *
வேதன்மாலுடனுருத்திரன்கணமயெச்சுரன்றலைவிதித்தபே *
ரோதுபின்னுறுகச்சுமானதொருவுச்சிதத்துறைசதாசிவன் *
மீதுகண்டுயிலவல்லையுன்கிருபையன்றிவேறொருவிருப்பமே(சஅ)

அறுசீர்க்கழிநெடில்

விருப்பங்கொடுமோகமெழுப்பியபேர்விழிக்குந்தொறுநாளுமிர
ங்கிடுவா, ருருக்குந்தனிநாயகன்மேவியபோதுழக்குங்கணைமாரி
யுலந்திடுமே, பெருக்குங்களிநெஞ்சநிறைந்ததுபோற்பிறப்புங்
கொடியேனையொழிந்திடவே, யெருக்குஞ்சடைமாமதியம்பாம
னெழுப்புந்துயிரேவியெழுந்தருளே (சகூ)

அருளாரமுதப்பெருங்கடலையடைக்குஞ்சிமிழோவடியார்கள் *
பொருளார்தமிழைப்புகட்டவந்தபொற்செப்பிருக்கும்புத்தமு
தோ, விருமாமுலைக்கண்கறுப்பென்பதிறப்பும்பிறப்புந்தொலைம
ருந்தோ, திருமாமகளுங்கலைமகளுந்திருத்தும்பணிதரித்தாளே.
(ருய)

மேற்படி.

தாளுஞ்சிலம்புமணிக்கலையுந்தயங்கும்பவளக்கொடியிடையுந் *
தோளுங்கமுகுங்கழுத்துமுலைத்துணையுஞ்சுடர்மாமணிவடமுங் *
காளங்கரும்பாவமைத்தபசுங்கையுஞ்செய்யகனிவாயு *
மீளுங்குழையைப்பொருதவிழிவேலுங்கடையேன்விழித்துணை
[யே. (௫௧)

எழுசீர்க்கழிநெடில்.

துணையானசோதிமயலின்வினைங்கடிறவோர்தவங்கள்பெறுமோவா *
ரணையாதபோதுநரகம்பலிப்பதறிவாருளுத்தரியார் *
கணைமால்பிறங்குசிவனார்கலந்தகனகாசலத்துமயிலே *
யிணையானபாதசரணம்புகுந்தவெளியேனையாளுமினியே. (௫௨)

பதின்சீர்க்கழிநெடில்.

இனியபதத்தைவிட்டுச்சனியமதத்தைமுட்டியிழிவுசடத்தைவிட்டு
வுழலாதே, தனியதிருத்தமுத்தசரணமெனக்கருத்துதவிமையையொ
ழித்துமுத்தியருள்வாயே, பனியையொழித்தவெற்றிவெயிலைநகை
த்தபச்சைபடருமொளிக்கிழத்திபனிமூரன், முனிவையொழித்தெ
னக்குவினியுசிவத்தையுற்றமொழியையுரைப்பதற்குமுயல்வாயே.

அறுசீர்க்கழிநெடில். (௫௩)

முயற்கறையின்றிவந்தமுழுமதிமுகத்தாயென்றன் *
றுயற்கறையொழிக்குமாறுசூத்திரங்கற்றுயிலலை *
புயற்கறையனையகண்டன்புந்தியிற்புணர்ந்தமாதே *
செயற்கரிதானபாவைசித்திரங்கலந்ததென்னே. (௫௪)

கலந்தத்தியோடுசிலந்தத்திமோதுகருங்குட்டநீடுகடலாலும் *
பெலம்பெற்றமாய்கைமலப்பற்றியேவுபிணங்கட்டையேனையொ
ழியாதோ, தலம்பத்துநாலுநிலம்பெற்றுவாழுந்தவம்பெற்றதேவி
யுமையவளே, குலம்பெற்றவாழ்வுகுணங்கெட்டநீதுகுரங்கிட்டமா

எழுசீர்க்கழிநெடில். [லைகுறியாதே. (௫௫)

குறித்துப்படுத்துச்சிரித்துப்பிரித்துக்குலைத்துப்படுத்துப்பிணை
மாகிப், பொறித்துத்துருத்திக்குணர்த்திச்சுழற்றிப்புசித்துப்பசித்
துச்சிலநாளிற், றறித்துச்சினத்துக்குறிக்கிட்டெடுத்துத்தகித்துப்
பிணத்தைச்சலியாதே, யிறுத்திப்பிடித்துக்கருத்தைத்திருத்தியெடு
[த்துத்தரிக்கப்பிரியாளே. (௫௬)

பிரியாதமாணிக்கவொளியாகியடியார்கள்பேசாதிருந்தவாழ்வே *
திருஞானசம்பந்தரொருஞானமாகச்சிறந்தேசொரிந்தபாலே *
குருவாகியென்றன்னைக்குறைதீரநீவந்துகூறுந்தகூறென்னவோ *
வெரியாதுழூரக்கிடந்தேனையாளாததென்னம்மையென்னம்மை
[யே. (௫௭)

அறுசீர்க்கழிநெடில்.

அம்மையென்னையன்பாகமமர்ந்திடுமழகைநாயே *
யிம்மையிற்காண்டற்காணாதிருக்கிலென்னிறக்கிலென்றே *
வும்மையான்புகழப்பெற்றேனாறுகுறையுளவோசொல்லாய் *
தம்மையேயுணருஞானத்தபோதனர்தழைக்குந்தாயே. (௫௮)

கலிவிருத்தம்.

தாயேயெனையாளுதயாபரியே *
நாயேனுனைநாளுநலம்புகழ்வேன் *
பேயேனொருபிள்ளையெனத்துணையாய் *
வாயேனொருவஞ்சமிலாதவளே. (௫௯)

எழுசீர்க்கழிநெடில்.

வஞ்சமிலாதநெஞ்சகியாயிமங்கலவாழ்மதிசூடி *
தஞ்சமதாகிவிஞ்சியஞானதந்திரவாழ்வுபெறுவேனோ *
கஞ்சனியாதகுஞ்சிதமேவுகண்களிகூரவருவாயோ *
அஞ்சினபாவியென்குறைதீருமஞ்சுருவாகியறிவாளே. (௬௰)

அறிவாகிமனமாகிவருகாரணங்களாயாவுஞ்சுகித்திருவரு *
மறமீதுகொடிதீதுபழியீதெனப்புகன்றப்பாலொளித்துவிட்டாற்
பொறியாளைமேவியதுசிவனுமைக்கல்லவோபுல்லினையில்லையன்
றோ, திரிசூலிகரபாணிதேவியார்ப்பதிகௌரிதிருவுளம்பற்றியரு
[ ளே. (௬௧)

அறுசீர்க்கழிநெடில்.

அருளைச்சுரக்குந்திருமுலையாளரர்க்குந்தெரியவரிதாகும் *
பொருளைச்சுரக்குங்கணவனுடன்போகங்கலந்தபொற்கொடியெ
னிருளைக்கடிந்தநெடும்புகழையேத்துங்கடையேன்றனையேமன் *
வெருளப்பிடிக்குமாறுளவோர்பிடித்தாலுனக்குவிரியமோ (௬௨)

எழுசீர்க்கழிநெடில்

வீரிசண்டிகைகுமாரியந்தரிவிலோசனத்திரயசூலியே *
நாரியெங்கள்குறைதீரவந்தருளும்ஞானதேசிசிவகாமியே *
தாரிசண்டிகைபுயங்ககங்கணிசடாதரிதவளமால்விடை *
யூரியம்பலவனுடல்கண்டுருகுமுண்மையேயருளுமிம்மையே (௬௩)

அறுசீர்க்கழிநெடில்

அம்மையேமூலாதாரத்தரும்பொருளுணர்த்தும்ஞானத் *
தெம்மையேபுரக்கவுன்றனிணையடிக்கிசைந்தபாரஞ் *
செம்மையேயுனதுசீராச்செப்பவுந்தெரியாதென்னை *
யிம்மையேயடிமைகொள்வாயீசனுக்கிசைந்ததேனே. (௬௪)

எழுசீர்க்கழிநெடில்

தேனினமூண்டெழுசீரிசைவண்டுண்மோதுகருங்குழன்மா தே
யென், றூனினுடம்புயிராகிவரந்தருமோருமையின்பொருளோதா
யே, ஞானசவுந்தரிமோனசுகந்தருநாரணிபஞ்சமிநாயேனைத் *
தானினிவந்தருளாயெனிலிங்கொருதாபரமொன்றிலைமாதா வே (௬௫)

அறுசீர்க்கழிநெடில்

வேயூதுங்கனிமாமரியன்றுணைவேலாருஞ்சனியே *
வாயூதுங்கனலேதாமூர்த்தியமாமூலக்குகையாய் *
நீயூதுங்கரிதீமூளும்படிநேரோலற்றருளா *
யாயீசங்கரிமாயாவிஞ்சமியாளாயென்குருவே (௬௬)

தரவுகொச்சகக்கலிப்பா

குருபோதகமூருவேறியகுகைவிட்டெழுகுளவிச் *
சுருபாவகமொருபோதகமெதுநீயதுசொல்வாய் *
கருபோதனைபொழியாவிருள்கருணைகரவமுதே *
யிருபோதினுமறவாதுனைநினையாதுறையிறைவி (௬௭)

அறுசீர்க்கழிநெடில்.

இறைவியுன்பதமேபோற்றியென்னையின்றருள்வாய்போற்றி *
மறலியைமுனிந்தாய்போற்றிமயிடனைத்தொலைத்தாய்போற்றி *
குறைவிலாநிறைவேபோற்றிகொடும்பகைதொலைத்தாய்போற்றி *
யறமிகவளர்த்தாய்போற்றியன்னையேபோற்றிபோற்றி (௬௮)

போற்றியோமூலாதாரப்பொன்னடிமலரேபோற்றி *
போற்றியோமனமும்வாக்கும்பொன்றிடமூளைத்தாய்போற்றி *
போற்றியோநமசிவாயப்பொருளிலேபுணர்ந்தாய்போற்றி *
போற்றியென்னுமையேஞானப்பொங்கொளிவிளக்கேபோற்றி (௬௯)

போற்றியென்னகத்துள்ளேபொருந்தியபொருளேபோற்றி *
போற்றியென்னம்மையெல்லாம்பொலிவுறவமைத்தாய்போற்றி *
போற்றியென்னப்பன்பங்கிற்புகுந்திடுங்கிளியேபோற்றி *
போற்றியென்றுரியாதீதப்பூங்கொடிமயிலேபோற்றி (௭௰)

போற்றிக்கசிந்துருகிவாழ்த்திப்புகழ்ந்தன்றுபூத்துச்சிவந்தபதமே
தோற்றிப்பணிந்தெனதுசோற்றிச்சைமண்டியெழுதாக்கத்தையெ
ன்றொழியுமோ, நாற்றிக்குமெண்டிசையுமேற்றித்தொழும்பரம
மூர்த்திக்குநங்கையிடமாய்ச், சாற்றிக்கிடந்தமறைபார்த்துப்புல
ம்பியதாய்க்குத்தகும்பணியதோ (௭௧)

பணியுந்தவத்தோர்பலதுயரைப்பறியக்கிழிக்கும்வேற்கண்ணு *
யணியாவரவம்பலபூண்டவாணர்க்கினியதிருமனையே *
மணியுங்கடந்ததிருவடியேமாலுக்கிளையமடமயிலே *
பிணியன்றுயரையாளுந்தெனையும்பிரியக்கடலுட்செறித்தருளே.

எழுசீர்க்கழிநெடில் (௭௨)

செறிக்கும்பதங்கள்குறிகளுற்றிறங்கள்செலுத்துந்தவங்களுணரோனே, கதிக்குஞ்சிறந்தபுசிப்புங்குடும்பக்கழிப்பும்பணர்ந்தகடையேனே, பொறிக்குஞ்சிலம்புதெறிக்கும்நடங்கொள்பொருப்பன்புணர்ந்தபுயல்மேனி, யெறிக்குஞ்சிவந்தமணிப்பங்கிழைந்தவிடத்துந்தொடர்ந்தமடமானே (௭௩)

பன்னிருசீர்க்கழிநெடில்

மடமான்குரம்போபடவரவோமணிவட்டகையோநிதம்பமென *
வகுப்பார்முனிவோர்மலரயனுமாலுஞ்சிவனுமற்றுள்ள *
விடமானவருஞ்சராசரங்களிருக்கேகமுதலாகமநூலு *
மெல்லாம்பிறந்துபிறவாமலிருக்குந்திரிகோணங்களிலே *
தடமானவையுந்தாமரையுந்தவத்தோர்குழுவுந்தனிமுதலுந் *
தங்கச்சிகரகோபுரமுந்தயங்குங்கோயிற்சிவஞானக் *
குடமாமிரண்டுகுறிகாட்டிக்குருவாழ்ந்திடத்தைக்குறிப்பறியார் *
குயிலேமயிலேயெமையளித்தவுமையேயவிடங்கூட்டுவையே.

அறுசீர்க்கழிநெடில் (௭௪)

கூட்டரக்கனையசெவ்வாய்க்கொடியிடைப்பளிங்குமேனி *
யேட்டினிலெழுதாவேதத்திறைவியென்னிதையத்துளே *
பாட்டுனைக்கொழுந்தஞானபாரதிபதுமத்தண்பூ *
நாட்டமுற்றிருந்தார்வெற்றிஞானமுங்கிடைக்குநாளே (௭௫)

எழுசீர்க்கழிநெடில்

நாளைநாளையெனவெண்ணியெண்ணிவெகுநாளுமேகழியநாயினேன், வேளைவேளையெனநின்றுநின்றுருகிவேறுவேறுசெயன்மேவினேன், காளையேறியிருவோருமோடிவருகாலமேதுபுகல்காரணி பாளையோதிகருணாகரிப்ரமபாலலோசனிபராம்பரி (௭௬)

பதின்மூன்குசீர்க்கழிநெடில்

பரியேறிநிமிடத்திலரியசிவஞானவழியன்புடனடத்தேறியுன் *
பாததாமரைநிழற்கீழ்மேவியென்வினைப்பவவிடாயாறவருள்வாய்
நரியேறுபுரவியெனநடனமிடவருபரமநாதற்குகந்தமணியே *
நாரணிபூரணிபசுபாசவினையற்றநன்மருந்தானபச்சை *

வரியேறுதோகைமயில்வடிவானகிள்ளையேவரையரையன்மாணிக்
கமே, மன்னுமுச்சுடராகிவளைவிரைக்காகியறுமாமாய்கைவல்லசது
ரி, திரிபுரமெரித்தசிவகாமியார்ப்பதிகௌரிதேவியுமைசத்திவிமலி
தேடியொருவடிவெனச்செப்பொணுவானந்தசித்தியுள்சித்தமுண
எழுசீர்க்கழிநெடில் ரே (எஎ)

உணருமறைமுனிவர்களுமிமையவருமலரயனுமுவரிநிறமணியரசு
னுந், துணைபதுமசரணமலரிடமுடிகள்பணியவருதுரையபரசிவனா
புதல்வியே, மணமொழிபூவேருசைசுவைவழிமனதுகழியுமொருவ
ரமுனதுகருணைபுரிவாய், நிணமுருகுமயில்விழியேயெனதுகுறை
தவிரவருண்மலிபருள்பொழியுமுகிலே (எஅ)

முகிலெனநிறத்தகொடிவெயிலெனநிறத்தமுழுமதியெனுமுகத்தர
சியே, யெகினமுமொளிக்குநடையிளமுலைகதித்தமலையிறுமிறுமெ
னத்துவளிடை, நெகிழ்களரற்றவருசரணபதுமத்துணையைநியிட
முநினைக்கவறியேன், சகிதபரமப்பிரியசயனிமவுனத்துருகுதருணி
கருணைச்சதுரியே (எகூ)

கலிவிருத்தம்

சதுமாமறைமுடிவாகியதனிஞானசுகத்தைப் *
பதுமாகரமதனுலருள்பரிபூரணமயிலே *
யிதுமாதருணாக்குங்குறியெந்தாயெனவந்தாளீ
முதுமாதவர்திகாரணமுடிவேதவவடிவே (அ௰)

எண்சீர்க்கழிநெடில்

வடிவெடுத்தெழுதரியமணியேமரகதக்கொடியனையமயிலே *
துடியிடைப்பிடியனமென்னடையேதுதிசெயக்கருணைபுரிசுடரே
யிடியிடித்தெனவசுரரொதிரோயெரிபரப்பியவயிரியெழிலே *
கடிதினித்கருணைபுரியடியேன்கடவுளுக்கடிமையுறுகதியே (அக)

எழுசீர்க்கழிநெடில்

கதியைப்பாரிதுபுதுமைக்காகியகடவுட்போதனைகாணென்றே *
பதியப்பாரிதுவிதிதப்பாதொருபயனைக்கூறியபரஞானம் [யே
பொதியப்பாரிதுவினையத்தோடியபொடியைத்தூவிநீயழை யா
நதியைப்பாதியின்மதியைச்சூடியநடனத்தாரிடமுடையாளே அ௨

எண்சீர்க்கழிநெடில்

உடையாளைமடமயிலையுவமையில்லாவுருவாளையாவருக்குமுயர்ந்த
தாயைச், சடையாளைமுக்கோணசட்கோணத்துத்தந்திரியைமந்தி
ரியைச்சௌவையௌவைக், கொடையாளையெங்கெங்குமுருவமா

சிக்கூறுசிலியுங்கலந்தகுமரிவாழ்வை, விடையாளைப்பரஞ்சோதிய
டியைப்போற்றவினையேனுக்கென்பயனோவிதித்தவாறே (௮௩)

பதினான்குசீர்க்கழிநெடில்

வாறென்றுநானுமினியாருதிசிவஞானவழிமருந்தாலெனதுநோய்
மாறியிடுமம்மையுன்றிருவடிக்கல்லாதுமற்றொருவருக்குமோதேன்
சேறென்றுதசைகுருதிநிணமூளைபுழுமலத்திரள்வைத்தசடவலை யி
லே சிக்கிக்கிடந்தலறிநெக்குண்டிருந்தகளைதீராதபழியுனக்கே *
மாறன்பிரம்பினான்மாறென்றுபட்டசிவன்மனதுக்கிசைந்தம ணி
யே மங்கையுமைசங்கரிமனோன்மணியெனைப்பெற்றமாதாமயான
த்தியே, கூறென்றுநால்வினைப்பேயொழியநானென்றகுற்றமும்
பற்றற்றிடக் குறைபட்டகுடநிறைந்தெப்படியிருந்ததக்கொள்கை
யைப்போலருளுமோ (௮௪)

கலிவிருத்தம்,

அருளுக்கொருகடலேல்வினையடவிக்கொருவனலே *
யிருளுக்கொருபகலேயெனதிதையத்தொருமுதலே, *
வெருளுக்கொருதெருளேசிவவிளைவுக்கொருவயலே *
பொருளுக்கொருபொருளேதுணையுமையைப்புகழியல்பே (௮௫)

எழுசீர்க்கழிநெடில்

இயலிசையுணரோனினியவைபுகழேனிருபதநினையேனெனையாள்வா
ய், செயலவைதெரியேன்செனனமுமறியேன்சிதடரிலடியேன்சிறி
யேனே, மயலினைமுனியேன்வறிஞர்கடலையேன்மனமொருவழி
யேமறுகில்லேல, னயலிலையரசேயரிவையர்சிரசேயரனிடப்பிறை
சேரமுதாளே (௮௬)

அறுசீர்க்கழிநெடில்

அமுதால்வளைத்தூக்கடனஞ்சையடக்குந்தடங்கணம்பிகையே *
யெமதாருயிருக்குயிராகியிருந்தானீசனுனையிருவா *
நமதாயிருக்குஞ்சிவஞானநாட்டங்கொடுப்பானுனையன்றித் *
தமதாயவனைத்தேடுவதென்றோயேசலித்தேன்றமியேனே (௮௭)

ள்ளென்றடியேன்றுயரகலவெழுந்தாற்குறையோவிழுக்காமோ *
நானென்றிரங்கிக்கிடந்துழைத்தானன்றேவெங்களையகமே *
ஆனென்றிருண்டவினைக்கூட்டினுள்ளேவருத்தமொழியாதோ *
ஃவனென்றுரைத்தாயுணருநெறியீந்தாலுமைவந்தெழுப்பாயே

எழுசீர்க்கழிநெடில் (௮௮)

எடுக்கவிட்டகுறைவந்துசர்க்குருவினுருவமாகியெளியேனை நீ *
முடுக்கநட்டமிடுபாதமேவுதொழில்மூட்டுவென்னிகருப்பூரமா *
யடுககவிட்டவினையாவும்வெந்தொழியவந்தரங்கம்துதந்துபோ *
நடுக்கமுற்றவிடமுண்டசங்கரனை நண்ணுமங்கையிதுநன்ற ரோ.

பதினான்குசீர்க்கழிநெடில் (௮௯)

நன்றென்றுதீதென்றுநாளென்றுபொய்யாகிநாளுங்கழிந்தோட வே நானென்றுகொண்டன்னமேனென்றுபேசாதுநஞ்சுண்டுறங் கலானே, னின்றென்றுகூடுவதுநிலையானஞானங்கணின்கருணையால ல்லவோ நீலிகரகாபாலிநின்மாயையன்றியொருநேரங்கள்சேருங் கொலோ, குன்றென்றிரண்டுமுலையொன்றென்றுபாதியிற்கோயா னுறைந்தகுயிலே கொள்ளாதபோராசைகொண்டான்மருந்தென்ன கூறுவதுநின்போதமே, யென்றென்றுசெல்வங்களிருபாதமேவி யதுவென்சிரமிறைஞ்சவைப்பா யெழிலபரவரியதொருவேகாந் தஞானியென்னிருவிழிக்கரியமணியே (௯௰)

அறுசீர்க்கழிநெடில்

மணிநிறமனையமடப்பாவாய்வளரொளிவிழியின்மநிப்பாவாய் *
துணிவுறுமனதையளிப்பாவாய்துரியவதீதநடிப்பாவாய் *
தணிவிலியெனதுதளிர்ப்பாவாய்சரணமதேதுதரிப்பாவாய் *
யணிமுழுநீறையளிப்பாவாயரகரநாமியகப்பாவாய் (௯௧)

பாவாயடியேனிருளறுக்கப்பகர்ந்தாய்சரணம்பரிதிமதி *
யாவாய்சரணஞ்சராசரங்கட்கன்னேசரணமம்பிகையே *
கூவாய்சரணமெனையாளக்குறிப்பாய்சரணங்கொடுப்பாயே *
நீவாவெனத்தானருள்புரிந்தாலுமையேசரணநிலைபெற்றேன் (௯௨)

எழுசீர்க்கழிநெடில்

நிலைபெற்றேயுனைமலமற்றேபுகழ்நிருபத்தாபதாடிதேடித் *
தலைவைத்தேபணிவிலைபெற்றேயவர்சரணத்தேவல்கள்சலியா மே
மலைபெற்றேனெனுமனமொத்தேசெயும்வகைசொற்றுயிலை யுமை
யாளே, யலைபெற்றேயுழலவசத்தேனினியருளைக்கூடுவதொருநா
ளே (௯௩)

நாளோகழிந்ததினியானோசிவன்பரமஞானோதயம்பெறுவதோ *
வாளோவெனுங்கணுமையாளோதவஞ்சகமூமாமோவருப்பய னே
னோ, கேளோமனம்படுவதேனோவருங்கவலைகேடோநினைந்தழியு
மோ, தோளோபசுங்கழையதேனோவெனும்பசியதோகாயெழுத்
ததுணையே (௯௪)

அறுசீர்க்கழிநெடில்

துணையுனையன்றிக்காணேன்சுடரொளிவிரக்கேதும்பை *
யிணைமலர்ச்சடையான்பாகத்தெழுந்தருளிறைவியுன்றன் *
புணைமலர்ப்பாதம்போற்றிக்கிடந்தனன்புலியேனம்மே *
பணைமுலைதிருவேயுன்றன்பரமெனக்கருணைபாரோ (௯௫)

கலிவிருத்தம்

பாரிலேபிறந்துழன்றபாவகாரியானுனைச் *
சீரிலுவிறைஞ்சவுந்தெளிந்தசிந்தைசிந்தியேன் *
போரிமேலமயங்கினேன்புலன்களென்றபுத்தர்கைச் *
சூரிமேலவிழுந்தபோதுபெற்றதாய்சுதன்கொலோ (௯௬)

அறுசீர்க்கழிநெடில்

சுதன்பிழைபொறுப்பாடாய்மூன்றந்தையும்பொறுப்பான்றூய *
ரதம்புரிவாரோவேறோரடர்க்கவுங்கொடுப்பாருண்டோ *
கதம்பமுமணியுங்காயக்கோட்டியேகருணைபாராய் *
சிதம்பரநடனங்கொள்ளுஞ்செல்வியேகல்விமாதே (௯௭)

எழுசீர்க்கழிநெடில்

மாதாகனங்குழையையோதாதிருந்துமதமாயாபவங்களலவோ *
நாதாசவுந்தரியைவேறேதரும்பரமஞானசுகங்களலவோ [யோ
வேதாகமங்களுரையேதோதெரிந்துணருட்வீணைசிந்தைவெறி
பூதாதியும்பிறவுமாரோகிடந்தமுதலாரோபுகழ்ந்துனையுமே (௯௮)

அறுசீர்க்கழிநெடில்

உரைத்தாயடியேன்றுயரறவேகொடுப்பேனெனுஞ்சொல்லுறுதி
பெறக்,கரத்தாமரையாலள்ளியிடக்கடையேன்பசிநீங்குதல்கண்டா
ய், சிரத்தாமரையினுயிரத்தெட்டிதழேசிறந்ததிருப்பதத்தைத் *
தரத்தான்குருவாயெழுந்தருளென்றேயதுவுன்றகும்பரி சே.

எழுசீர்க்கழிநெடில் (௯௯)

பரிசமுடனைந்துபுலனுகியதறிந்தபதயங்கயமொருத்தரறியா *
வரிசையுடனெங்கும்விளையாடியதழித்துநிதம்வந்துபுரிகின்றம யி
லே, தெரிசனமுதற்பொருளுதிப்பதுமொடுக்கியதிசைப்பரமவெ
ட்டவெளியும், புரிகுழல்சவுந்தரியெனக்கருள்பரம்பரமவன்னியடி
யொன்னின்முடியே (௱)

திருச்சிற்றம்பலம். முற்றிற்று.

---

கணபதி துணை.

# அதிவீரராமபாண்டியராஜன்

அருளிச்செய்த

# திருக்கருவைப்

# பதிற்றுப்பத்தந்தாதி

## மூலபாடம்

இஃது

சரவணப்பெருமாளையரவர்களால் பரிசோதித்த பிரதிக்கிணங்க

களத்தூர், வேதகிரிமுதலியார் குமாரர்

## ஆறுமுகமுதலியாரால்

பார்வையிடப்பட்டு

புங்கத்தூர்.

ம-சபாபதிமுதலியாரது

கல்விவிளக்க அச்சுக்கூடத்திற்

பதிப்பிக்கப்பட்டது.

சித்தார்த்தி௵ - சித்திரைமீ.

1859



# திருக்கருவைப்
# பதிற்றுப்பத்தந்தாதி.



காப்பு.

ஆனகருவைப்பதிற்றிப்பத்தந்தாதிச்சொல்லலங்கன்முற்று ... *
ஞானவுருவாங்களவீசனளினசரணமிசைச்சாத்தத் ... ... *
தானவருவிபொழிகடக்கைத்தறுகட்சிறுகட்புகர்முகத்துக் ... *
கூனவிளவெண்பிறைக்கோட்டுக்குஞ்சரத்தினடிதொழுவாம் *

சீரார்கமலச்சேவடியென்சிந்தையிருத்தியுனதுதிருப் ... ... ... ... *
பேராயிரமுமெடுத்தோதிப்பெம்மான்கருவையெம்மானென் ... ... *
றாராவமுதமுண்டவர்போலனந்தானந்தத்தநெகிழ ... ... ..... ... *
வாராவின்பமறிவித்தாயறியேனிதற்கோர்வரலாறே ... ... ...(௧)

ஆறாக்காமக்கொடியகனலைவர்மூட்டவலமனம் ... ... ... ... *
நீறாய்வெந்துகிடப்பேனைநின்றாள்வழுத்தநினைவுதந்து ... ... ... *
மாறாநேசத்திரவுபகன்மறவாதிருக்கவரமளித்தாய் ... ... ... ... *
சீராடரவமுடித்தசடைக்கருவைவாழுஞ்செழுஞ்சுடரோ .. ... ... (௨)

சுடரோவலியத்தடுத்தாண்டதுணையேபிறவித்தொடுகுழிவீழ் ... ... ... *
இடரோயகலக்களாநீழலிருந்தகோவேயெம்பெருமான் ..... .. ... .. *
உடலேயோம்பித்திரியுமெனையுனைநினைக்கப்பணித்தவருட் ... ... ... *
கடலேயுனையன்றொருதெய்வங்காணவழுத்தக்கடவேனோ... ... .. (௩)

…வனிற்சிலைவேலொடுகணைக்கும்விளக்குமகளிருளங்கவற்றும் ... ... *
…ரணர்நொடியவிழிவலைக்கும்பற்றாய்வருந்தியனுதினமும் ... ... ... *
…னத்துயரக்கடலழுந்துமெனையும்பொருளாவடிமைகொண்ட ... ... *
…நானத்திருவேதமிழ்க்கருவைநம்பாபொதுவினடித்தோனே ... , ...; (௪)

…டித்தேன்பொய்க்கூடெடுத்தவமேநன்னாள்கழியவின்னாளில் ... ... *
…டித்தேனுனதுதிருநாமம்பண்டைவினையைப்பற்றறுத்தேன் ... ... *
…பிடித்தேன்பிறவிக்கடனீந்தப்பெரியபுணையாவுனதடியை ... ... ... *
…முடித்தேனுள்ளத்தெண்ணமெல்லாங்கருவைவாழுமுன்னோனே ... (௫)

முன்னைப்பிறவித்தவப்பயனோமுழுதுமறியாமூடனிவன் ... ... ... *
…ன்னக்கருத்திலிரங்கியோயாதோவறியேனிரவுபகல் ... ... ... *
…ன்னம்பாகிற்கோற்றேனிற் கனியிற்கனிந்தகவிபாட... ... ... *
அன்னத்தொகுதிவயற்கருவையாண்டானென்னையாண்டதுவே ... (௬)

ஆண்டகுரவனவனையல்லற்பிறவியறுப்பானை .. ... ......*
வேண்டும்பதவிதருவானைவெளிவீட்டின்பமளிப்பானைத் ... ... *
தாண்டல்செப்பாமணிவிளக்கைத்தொழின்மூன்றியற்றுந்தொல்லோனைக் ...*
காண்டற்கரியபேரொளியைக்களாவினிழற்கீழ்க்கண்டேனே ... ... (௭)

கண்டகண்கள் புனல்பாயக்களிப்பா யுள்ளங்கரையழிய ... ... ... *
விண்டமொழிபநாக்குழறவிம்மிமேனிமயிர்பொடிப்பப் ... ... ... *
பண்டைவசம்போய்ப்பரவசமாய்ப்பரமானந்தத்தெளிநறவம் ... ... *
உண்டுதெவிட்டாவருள்புரிந்தான்கருவைவாழுமுரவோனே ... ... (௮)

உரகாபரணத்திருமார்புமுமையொப்பனையாளிடப்புறமும் ... ... *
சிரமாலிகையும்புரிசடையுஞ்செய்யவாயுங்கறைமிடறும் ... *
வரதாபயமுமழுமானும்வயங்குகரமுமலரடியும் ... ... *
கருவாபுரியான்வெளிப்படுத்திக்காட்சிகொடுத்துநின்றானே ... (௯)

நின்றநிலையுஞ்செய்தொழிலுநினைத்தகுறியும்வழிபாடும் ... *
ஒன்றுபதமும்பதங்கடந்தவுண்மைப்பொருளுமறியேனை ... *
இன்றுன்னடியாருடன்கூடவெண்ணம்புரிந்தவினியவருள் ..., *
நன்றுநன்றுதமிழ்க்கருவைநம்பாவும்பர்நாயகனே ... ... (௰)

(வேறு)

நாயகன்முகுந்தன்சததளப்பொகுட்டிநான்முகனென்னவீற்றிருக்கும் *
தூயவன்கருவைக்களாநிழலமர்ந்தோன்றுணையடிப்புகழினைவழுத்தி ... *
மாயிருஞாலமெடுத்தெடுத்தேத்தவரம்பெறுமதுரநாவலர்கள் ... *
மேயிருவிசும்பிற்கற்பகநீழற்செல்வமும்வேண்டுவதிலையே ... (௰௧)

வேண்டுவதொன்றுதமியெனப்பிறப்பும்வெந்தழனரகிடைவிழினும் *
காண்டகுசிறப்பினரம்பையர்சூழக்கற்பகநீழல்வைகிடினும் ... *
தூண்டகுசுடரேகளாநிழலமர்ந்தசோதியேகருவைநாயகனே ... *
ஆண்டகாய்நினதுதிருவடிக்கமலத்தன்பெனுமழிவிலாப்பொருளே (௰௨)

அழிவிலாப்பொருளேபழமறைக்கொழுந்தேயலையெறியமுதவாரிதியே *
ஒழிவிலாதருளுங்கற்பகக்கனியேயொப்பனைமைப்பரந்தெறிக்கும் ... *
விழியினுளுருகியொருபுறமளித்தவிமலனேகருவையம்பரனே ... *
இழிவிலாப்புணையாப்பிறவியங்கடனின்றேறநான்பெற்றதுன்பதமே... (௰௩)

உன்பதமேத்தித்துன்பவேரறுக்கவுலகினிற்றிருவுடன்வாழும் ... *
மன்பதைக்கெல்லாமெய்திடுந்தரமோவலியவந்தெனைத்தடுத்தாண்டுள் ... *
அன்புவந்தொருவரறிந்திடாவறிவுமறிவுறுத்தருளினையதற்கு ... ... *
முன்பெதுபுரிந்தேன்கருவையம்பதிவாழ்முதல்வனேமுக்கண்வானவனே (௰௪)

வானெரியறல்கான்மண்ணெனப்பகுக்கவரும்பெரும்பூதமோரைந்தும் ... *
ஆனமுக்குணமுங்கரணமோர்நான்குமனைத்துமாயாதியீறின்றி ..... *
ஊனுறையுடலுக்குயிருமாயுயிருக்குணர்வுமாயொன்றினுந்தோயா ... *
ஞானநாயகனேகருவையம்பரனேநானறிந்துரைக்குமாறெவனோ .. (௰௫)

எவனுயிர்க்குயிராயெள்ளுமெண்ணெயும்போலெங்கணுமிடையறநின்றான் *
எவனனைத்துலகுமீன்றுகாத்தழிக்கவிறைமைசான்மூவுருவெடுத்தான் ... *
எவன்முதலிடையீறின்றியெஞ்ஞான்றுமீறிலாமறைமுடியிருப்பான் ... *
அவனெனைப்புரக்கத்திருக்களாநீழலமர்ந்தருள்புரிந்தகாரணனே ... (௰௬)

காரணமேதென்றறிகிலேன்றமியேன்கற்றலமனத்தினைக்களைந்து ... *
வாரணிமுலையாளொப்பனையோடுமழவிடைமேலெழுந்தருளி ... *
நாரணனறியாத்திருவுருக்காட்டிநல்லருள்சுரந்துவாழ்வித்தான் ... *
பூரணன்கருவைக்களாநிழலமர்ந்தபுண்ணியன்விண்ணவர்க்கிறையே... (௰௭)

ிண்ணவர்மகுடகோடிவீழ்ந்திறைஞ்சும்விரைமலர்ச்சேவடிமிசையே ... *
ண்ணிறைகாதலன்புநின்றுருகவுலையிடுமெழுகெனவுருகிக் .. ..... *
ண்ணிநீர்வாரக்கருவையம்பரனேகடவுளேயென்றெடுத்தேத்தப் ... *
ுண்ணியம்புரிந்தேனிப்பெரும்பேறுபூதலத்தெவர்பெறுவாரோ ... (௰௮)

ிபறுவதுநினதுதிருவடிக்கமலம்பேசுவதுன்றிருநாமம்... ... ... ...*
றுவதுநினதுதிருவுருவெளியாமுணர்வதுன்னருளலாதுண்டோ ... ...*
றுவறுசிறப்பின்மாசிலாமணியேயவரதனேசிவபெருமானே ... ... ...*
நறுமுனிபரவக்களாநிழலமர்ந்தகொடிமதிற்கருவையாதிபனே... ...(௰௯)

ூதவன்மதிபாரனல்வெளிபுனல்காலருமறையெச்சனென்றெட்டுப் ... ...*
ிபதமாமுருவாயருவமாய்நிறைந்தபெற்றியாலுற்றுநானுலனே... ... *
ிதிறனுணர்வேனுணருமாறருளாயிளநிலாப்பசுங்கொழுந்தணிந்த... ... *
ிசாதிமேயகருவையொப்பனைகளபத்துணைமுலைதழுவுகாதலனே... ... (௨௰)

(வேறு.)

ாதலுற்றிடமண்ணிலைபெற்றிடக்கனிந்திடக்களிகூரப்... ... ... ... *
ிபாதமுற்றிடயானெனதென்றிடும்புலைச்செருக்கறமாற... ... ... ...*
ாதன்முத்தமிழ்க்கருவையம்பரனெனநாத்தழும்புறவோதி ... ... *
ிதிமற்றுநான்பெற்றதையிற்றெனவுரைத்திடமுடியாதே ... ... (௨௧)

ிடிகடந்ததுககனகோள்கைநெடுமுகட்டினுக்கப்பாலும்... ... ... *
அடிகடந்ததுபாதலமேழினுக்கப்புறத்தனலோடும்... ... ... ... *
துடிகடந்தகைகடந்தனதிகந்தமாறெல்புகழ்க்களாவீசன்... ... ... *
ிபொடிகடந்தபான்மேனியான்றிருநடம்புகலுதற்கெளிதாமோ ... (௨௨)

ாளியன்புன்றொழிற்பாதகன்மாதராரிளமுலைவளம்வேட்ட— ... ... *
ளியன்றீக்குணவஞ்சகநெஞ்சனுங்கருங்கலைக்கரைவித்து ... ... *
ிவெளியில்வந்துநின்பொன்னடிசென்னியின்மிலைந்தெனையாட்கொண்ட ..*
ஒளிகனிந்தநின்னருட்குணமுரைப்பதாரருங்களாவமர்ந்தோனே ... (௨௩)

அமரர்மாதவர்முனிவரர்திரண்டுநின்றனுதினந்தொழுதேத்தும் ... ... *
தமரநூபுரப்பொற்சரணேத்திடத்தமியனுக்கருள்செய்தான்... ... ...*
குமரனலடுஞ்சூர்ப்பகைதடிந்தவன்கொள்ளைவண்டினமார்க்கும் ... ...*
ிமலவாவியும்பொங்கருஞ்சூழ்ந்திருக்கருவையம்பெருமானே... ... (௨௪)

கருவையம்பரனம்பரமேனியன்கடவுளர்காணுத ... ... ... ... *
உருவையம்பிகைபெறப்பகுந்தளித்தவனென்னலர்புரநீற்று... ... ... *
பெருவையம்பெனக்கண்ணணையுடையனென்பிழைபொறுத்தழியாத ... *
திருவையம்புவிச்சிறப்பொடுமளித்தவன்றிருக்களாவுடையோனே... (உரு)

உடையமென்றுகம்மக்களைமனைவியையொக்கலைப்பெருவாழ்வை ... ... *
அடையநல்குசீர்ச்செழும்பொருண்முதலியவனைத்தையுநினைப்பாரோ ... *
விடையின்மேல்வருதிருக்களாநாயகன்விரைமலர்ச்செழுங்கொன்றைத் ...*
தொடையல்சூவணிபானடியவர்க்கன்பொடுதொண்டுசெய்மனத்தாரோ...(உசு)

மனத்தையானினம்வணங்குவன்மின்னெனவைகலுநிலையற்ற... ... ...*
தனத்தைவாழ்வினைநிலையெனமதித்துழலாசையிற்றளராமே... ... ... *
புனத்துழாய்முகில்போற்றிடுங்கருவைவாழ்புண்ணியன்பாலற்காச் ... ...*
சினத்தகாலனைப்புதைத்தவன்பங்கயச்சேவடிவணங்கென்றே... ... ...(உஎ)

வணங்கெனத்தலைபளித்தனையென்புகழ்வாழ்த்தெனநாத்தந்தாய் ... ... *
பிணங்கெனத்திருக்கூட்டமுங்காட்டினையினிப்பெரும்பேறுண்டோ ... *
துணங்கையிட்டுவெம்பேய்க்கணங்குதித்திடச்சுடலையாடரங்காகக் ... ...*
குணங்கள்போற்றநின்றாடியகுழகனேகருவையம்பெருமானே .. ...(உஅ)

பெருமைசான்றநின்றிருவெழுத்தைந்துமேபெரும்புணையெனப்பற்றி ...*
அருமைசான்றவிப்பவக்கடல்கடக்குமாறுசையிற்றுணிகின்றேன்... ... *
இருமையின்பமுமடியவர்க்கூட்டிடுமிறைவனேயெம்மானே... ..... ... *
தருமமூர்த்தியேயொப்பனைவனமுலைதழுவுதிண்புயத்தானே... ... (உகூ)

தானையெண்டிசைமுக்கணுமுச்சுடர்கழைச்சடைக்கதிர்க்கற்றை... ..... ...*
மேனிவெங்கனலாடிடமுலகெலாம்வெந்தொழிபுறங்காடு... ... ... *
சேனைவெங்கொலைப்பேய்க்கணமென்னினத்திருக்களாவமர்ந்தோனை ... *
வானநாடரும்பூதலத்தடியரும்வணங்குவதெவ்வாறே... ... ... ...(கூ0)

(வேறு)

எவ்வமுற்றதிரிமலமிற்றது... ... ... ... ...*
செவ்விஞானத்திருக்கண்டிறந்தது ... ... ..... *
கொவ்வைவாயுமைகொண்கன்கருவையான் ..... ...*
வெளவநஞ்சமுண்டான்கழல்பாடவே... ... .(கூக)

பாடினேன்புகழ்ப்பங்கயச்சேவடி ... ... ... *
சூடினேன்கருவாபுரிச்சோதியை ..... ... ... *
நாடினேனவனுனெனும்வேறறக்... ... ... .. *
கூடினேனடியார்திருக்கூட்டமே . ... ... (௩௨)

கூட்டமிட்டகருவிகுலைந்துடர்... ... ... ... *
சேட்டையற்றுள்ளறிவுசிதைப்புமுன் . ... ... ... *
நாட்டமூன்றுடைநாதன்முகலிங்கன் ... ... ... *
தாட்டுணைக்கமலந்தலைக்கொண்மினே .. ... ... (௩௩)

தலைக்கொள்வெண்டலைமாலயன்றண்ணிலா... ... *
மிலைக்குந்தென்கருவாபுரிவேதியன் ... ... ...... *
புலைக்குரம்பையடம்பிற்குடிபுகுந்... ... ... *
தலைக்குநெஞ்சமொழித்தெனையாள்வனே ... (௩௪)

[illegible]ன்னையாள்பவனென்னுள்ளிருப்பவன் .. *
தன்னையான்றொழத்தண்ணளிதந்தவன் ... *
பொன்னையாளும்புயன்றொழநின்றவன் ... *
கன்னிபாகன்கருவைக்கிறைவனே ..... (௩௫)

இறைவனெங்கணுமியாவையுமானவன்... ... *
பிறையணிந்தசடிலன்பெருந்தகை ... *
கறையிலங்குமிடற்றன்கருவையான் ... *
மறையநின்றெனையாண்டதென்மாயமே (௩௬)

மாயவல்லிருணீங்கமனத்திடைத் ... *
தூயஞானச்சுடர்விளக்கேற்றிய ... *
நாயகன்களவீசனைமயிர் ... ... *
பாயுமால்விடையான்பரமேட்டியே ... (௩௭)

பரமெனக்குனையன்றியோர்பற்றிலேன் ... *
சரமமுற்றியபோதிற்றருவையோ .... *
கருவைநிற்குங்களாமுதலேமறைச் ... *
சிரமிருக்குந்திருவடிச்செல்வமே ... (௩௮)

செல்வமீயுஞ்சிறப்புமளித்துளத் ... *
நல்லநீர்க்குமறிவையுதவிடுங் ... ...*
கல்விநல்குங்கதிதரும்பொற்கிரி ... *
வல்விலான்களவீசனைவாழ்த்தலே ... (௩௯)

வாழ்வைநம்பிமதிகெட்டுச்சும்பியில் ... ...*
வீழ்புன்மாந்தர்க்குறுதிவிளம்புவேன் ... ...*
தாழ்சடைக்களவீசன்றனலயஞ் ... ... *
சூழ்தல்சூழிற்றுறக்கங்கிடைக்குமே ... (௪௰)

(வேறு.)

கிடைத்தபொருள்கரத்திருக்கக்கிடைத்திலவென்றயர்வார்போல் ... *
படைத்தநினதருள்பெற்றும்பெற்றிலர்போற்பரிவுற்றேன் ... *
முடைத்தலையிற்பலிகொள்ளுமுகலிங்காமுகிழ்த்தநிலாச்... ... ...*
சடைத்தலையாய்நின்மாயமியாதுணருந்தரத்ததோ ... ... (௪௧)

உணராதநின்னிலையைநீயுணர்த்தவுணர்ந்ததற்பின்... ... ... *
புணராததாடலையிற்புணர்ந்ததெனப்புகழோங்கத் ... ... *
தணவாமலெனையுனக்குத்தந்துருகியிரண்டற்றேன் ... ... *
பணராசச்சிலம்பணிந்தபழமறையெம்பெருமானே ... ...(௪௨)

பழமைபாம்வாசனையிற்படிந்தமனப்பந்தத்தின் ... ... ...*
விழைவினாற்றலைமயங்கிவேறுவேறுருவெடுத்துச் ... ... ...*
சுழல்குயவன்றிகிரியைப்போற்பவக்கடலிற்சுழல்வேனே ... *
மழவிடையாய்பால்வண்ணவானவர்தங்கோமானே ... (௪௩)

கோமானேகருவைவருகுணக்குன்றேமலநிதழித் ... ... *
தேமாலைபுனைந்தசடைச்செழுஞ்சுடரோயென்றென்று ... ...*
பாமாலைவாய்பாடிக்கைகொட்டிப்பதம்பெயர்த்து ... ... *
தாமாடவம்மின்காதொண்டராய்நமரங்காள் ... ... (௪௪)

தொண்டுசெய்துவழிபட்டுச்சுருதிபுகழ்களாவீசன் ... ... *
புண்டரிகமலர்த்தாளைப்போற்றிமுதற்பேறுபெற்றார் ... ...*
அண்டர்பிரானான்முகத்தோனாழியானிவனென்றான் ... ... *
மண்டனின்ஞாலத்தெளியமானிடரோவழுத்துவார் ... (௪௫)

வழுத்திடுவேனுவாரமலரிடுவேன்கரங்கொண்டு ... ... *
தொழத்தகுவேன்முடிதாழ்த்திச்சூழ்வருவேன்றுணைத்தாளால் ... *
அழுத்திடுவேன்மனத்துன்னையகம்புறமொன்றாயுருகிப் ... ... *
பழுத்திடுவேனருள்கனியப்பால்வண்ணநம்பரனே ... (௪௬)

நம்பியுனதருள்வேட்டுநடுக்கடலுட்கலங்கவிழ்ந்து ... ... *
வெம்புதுயர்வனத்தார்போன்மெலிகின்றேனெடுநாளாக் ... ... *
கும்பமுனிக்கருள்புரியுங்கொற்றவனேமுகலிங்கா ... ... *
தும்பைமுடித்தோட்புரக்கவிரக்கமின்னந்தோன்றாதோ ... (௪௭)

தோன்றியபோதுடன்றோன்றித்தோன்றாதுமறைத்தென்னை ... ... *
யான்றசெழுஞ்செம்பிலுறைகளிம்புபோலகலாமல் ... ... *
ஊன்றுமலத்துகளகற்றியுன்னருளும்பெறுவேனோ ... ... *
மூன்றுலகுந்தொழுதேத்துமுகலிங்காமுதற்பொருளே ... (௪௮)

பொருள்வேட்டுநிலம்வேட்டும்பூவையர்தம்புணர்கலவி ... ... *
மருள்வேட்டுநாடோறுமனவலிகெட்டயர்கின்றேன் ... ... *
அருள்வேட்டுன்சந்நிதிப்பட்டருந்துயர்போயுய்வேனோ ... *
தெருள்வேட்டார்க்கருள்புரியுந்திருக்களவிலுறைவோனே ... (௪௯)

உறைவாய்நின்மனத்தன்பருடனேறுமுயராகி ... ... ... *
நிறைவாயெவ்வுலகனைத்துநீக்கமிலாதுணர்ந்தோர்க்கும் ... ... *
மறைவாயுய்த்துணரார்க்குமறைபயிலுங்கருவையில்வாழ் ... ... *
இறைவாநின்றிருவிளையாட்டியான்வழுத்தவடங்காதே ... ... (௫௰)

(வேறு.)

காதற்பெருக்குமொருகோடிகோடிகவலைப்பெருக்குமிகலாய் ... *
வாதைப்படுத்தவலைமாறுபோலமனமாலுழன்றுவிடவோ ... ... *
வேதப்பெருக்குமுழவோசைவிம்முவிழவிற்பெருக்குமியல்கூர் ... *
நாதப்பெருக்குமொழியாதுமல்குகருவேசஞானவுருவே ... (௫௧)

உருவாகிநிற்றியருவாகிநிற்றியுயிரோடெவர்க்குமுறவாய் ... ... *
மருவாகிநிற்றிமலராகிநிற்றிமறையாகிநிற்றிமறையின் ... ... *
பொருளாகிநிற்றிபுனையானறிந்துபுகழ்கின்றவாறுமறியேன் ... *
கருவாபுரிக்குளுறைதேவதேவகதியேதெனக்குமொழியே ... (௫௨)

மொழிகின்றவாறுசமயங்கடோறுமுழுதுஞ்சுழன்றுநிலையற்
றழிகின்றசிந்தையவலங்கெடுத்துன்னடிகண்டுநாடியறியும்
விழியுங்கொடுத்தமுகலிங்கநாதமிகுமன்பர்தேடுபொருளே
பொழியுங்கடைக்கணருளாலளித்திபுனையற்றமுத்திநிலையே (௫௩)

முத்திக்குவித்துன்னடியார்கள்சிந்தைமுளரிக்கருக்கண்மொழியெண்
சித்திக்குமூலந்தவயோகிகட்குத்தெளிகன்னலூறுமிரதம்
பத்திக்கதித்தமருள்வீசுகொண்டல்களவீசனெங்கள்பரமன்
அத்திக்குமுன்னம்வரமேயளித்தகருவேசனம்பொனடியே (௫௪)

அடியாரிழைத்தபிழைகோடிநெஞ்சினறியாதவாதிமுதல்வன்
கொடியார்புரத்தையழன்மூடவன்றுகுறுமூரல்கொண்டகுழகன்
நெடியோன்வழுத்துகளவீசனென்றுநினைந்தாறுமுள்ளநெகிழ
முடியேறுமங்கைபுளகிக்குமேனிமுகுளிக்குமென்கணிணையே (௫௫)

என்கண்ணிடத்தினகலாதசெல்வனெழிலார்களாவின்முதல்வன்
வன்கண்ணர்நெஞ்சுபுகுதாதநம்பன்மனமாசறுத்தபெருமான்
புன்கண்ணகற்றியடியாரைவீடுபுகுவித்துநின்றபுனிதன்
தன்கண்ணெனக்குமுடியாதவன்புதரவென்கொல்செய்ததவமே (௫௬)

தவமுந்தவத்தினுறுபேறுமானதலைவாகளாவின்முதலே
புவனங்களாவையுயிர்வர்க்கமாவைநுகர்போகமாவைபுகலுந்
திவசங்களாதிவருகாலமாவைதெளிவார்தெளிந்தவமையத்
திவையன்றிநிற்பையெனினையநெஞ்சினெவர்மதிப்பருனையே (௫௭)

உன்னமோதியுனையேவணங்கியுறுபூசைபேணுமரவோர்
பொன்னுடளிக்கவரநல்குமாதிபுனிதாகளாவிலுறைவோய்
முன்னையுணக்கியானடியானுமல்லன்முழுஞானியல்லனெளியேன்
என்னைபிழைத்தபிழைகோடியுள்ளவெனினும்புரத்தல்கடனே (௫௮)

கடவாரணத்தினுரிபோர்வைகொண்டகருவேசவாதிமுதல்வா
சடவார்கனைக்குளவமேகிடந்துதடுமாறுநெஞ்சமுடையேன்
அடைவாய்வழுத்திவழிபாடுசெய்துன்னடிபேணவொன்றுமறியேன்
மடமாலகற்றியிடமாறளிக்கும்வரநீகொடுக்கும்வரமே (௫௯)

ணையாகிப்பற்றிப்பிறிபாவகாரிமறமன்றிவேறுபுரியேன் ... *
விணைமாலைசுற்றுகுழலாரிடத்துமிகவாசைவைத்துமெலிவேன் ... *
ணைபாதிநக்குமனநீகளைத்துன்னடிபாடவைத்தகதைநான் ... *
உணையாணிறைக்கமுடியாதுமுக்கணுடையாய்களாவிறெளியே ... (௬௰)

வேறு.

ஒளிமதிமுடித்தவேணியொருவனேகருவையானே ... *
தெளிவுறுநெஞ்சந்தன்னைத்தெருட்டிநின்னிலையைக்காட்டி ... *
அளியினாலென்னையாண்டவருட்குன்றேயுன்னையின்னும் ... *
எளியனேன்பிறவிவேட்டோவேத்திடாதிருக்கின்றேனே ... (௬௧)

இருக்கினுநிற்கும்போதுமிரவுகண்டுயிலும்போதும் ... *
பொருக்கெனநடக்கும்போதும்பொருந்தியூண்டுய்க்கும்போதும் ... *
முருக்கிதழ்க்கனிவாயாரைமுயங்கிநெஞ்சழியும்போதுந் ... *
திருக்களாவுடையநம்பாசிந்தையுன்பாலதாமே ... (௬௨)

சிந்தனையுனக்குத்தந்தேன்றிருவருளெனக்குத்தந்தாய் ... *
வந்தனையுனக்குத்தந்தேன்மலரடியெனக்குத்தந்தாய் ... *
பைந்துணருனக்குத்தந்தேன்பரகதியெனக்குத்தந்தாய் ... *
கந்தனைப்பயந்தநாதாகருவையிலிருக்குந்தேவே ... (௬௩)

தேவனேநின்னையல்லாற்பிறிதொருதேவையெண்ணேன் ... *
பாவனேநின்னினல்லாற்பிறிதொருபற்றுமில்லேன் ... *
யாவையுங்காட்டக்கண்டேனென்னுளேநின்னைக்கண்டேன் ... *
காவலாகருவையானேயினிமற்றோர்காட்சியுண்டோ ... (௬௪)

உண்டெனமறைகளோதுமொருதனிமுதலேநாளும் ... *
அண்டருமுனிவர்தாமுங்காண்கிலாவடியேனுன்னைத் ... *
தெண்டிரைவளாகமுற்றுந்தேடினேன்றேடித்தேடிக் ... *
கண்டனன்களாவினீழற்கருவைமாநகரத்தானே ... (௬௫)

தானெனவுருவமாகிச்சங்கற்பவிகற்பங்கொண்டு ... *
வானகமாகிமண்ணுப்க்கடல்களாய்மலைகளாகி ... *
ஞானமாமனப்பெப்பச்செய்தவிந்திரசாலந்தன்னால் ... *
நானுனைப்புணரமாட்டேன்களாநிழனண்ணுவானே ... (௬௬)

நண்ணருந்தவங்கள்செய்துநானுடல்வருந்தமாட்டேன் ........................ *
எண்ணுமைம்புலனுஞ்செற்றங்கிரிவினையறுக்கமாட்டான் .................... *
கண்ணகன்ஞாலம்போற்றக்களாநிழலமர்ந்துவாழும் ........................ *
அண்ணலேயினியெவ்வாறேவடியனேனுய்யுமாறே .......................(௬௭)

உய்பவேவாருறுதிநாடாவுலகினிற்சமயமென்னும் ........................ *
வெய்யவார்கலியில்வீழ்ந்துவெந்துயருழக்கின்றேற்றுத் .................. *
தையலோர்பாகம்வைத்துத்தண்டமிழ்க்கருவைவாழும் ........................ *
ஐயன்வந்தாண்டுகொண்டததிசயம்விளக்குமாறே ........................ (௬௮)

அதிசயமுளத்திற்காட்டியகம்புறந்தானுக்காட்டித் ........................ *
துதிசெயக்கவிநாக்காட்டித்தொடக்கறுநேயங்காட்டி ........................ *
மதியினிற்களிப்புங்காட்டிவந்தெனையாண்டுகொண்டான் ........................ *
கதியெனவுலகம்போற்றக்களாநிழலமர்ந்தநாதன் ........................ (௬௯)

நாதனைகவிஞனைவநள்ளிருட்போதிற்சென்ற ........................ *
தூதனையிமையவல்லிதுணைவனைகருவையானை ........................ *
போதனையத்திறனும்பொலன்கழற்றிரண்டுபூண்டும் ........................ *
ஏதநீயகற்றிடாமலிருப்பதுமிசையதாமோ ........................ (௭௰)

(வேறு.)

இசையுஞ்செல்வமுந்திருவுமின்பமும் ... ... *
அசைவிலாதபேரறிவுமுத்தியும் ............... *
விசையமுந்தருங்கருவைமேவினன் .... ...... *
திசையுடுத்தவன்சீர்படிக்கவே ...... ...... (௭௧)

படியளந்தவன்பதுமவேதியன் ......... ...... *
அடிமிடித்தலமறியொணாதவன் .............. ... *
கடிகொண்மாமலர்க்களவினீழலான் ............ *
குடியிருக்குவன்னெஞ்சுகோயிலே ...... (௭௨)

கோயில்சூழவுங்குடங்கைகொட்டவும் ... ... *
வாயிற்பாடவும்வணங்கியாடவும் ......... ...... *
ஆயிரம்பெயர்க்கருவையாதிபன் ... ... ...... *
நேயமுற்றுவாழ்தொண்டர்நேர்வரோ ...... (௭௩)

நேர்ந்தநெஞ்சமேநெடிதுவாடிநீ...... ......*
சோர்ந்ததுன்பமுந்துயரும்போக்குவான்... *
வார்ந்தசெஞ்சடைக்கருவைவானவன்...... ...*
ஆர்ந்தபேரருளருவியாடவே ... ... ... (௭௪)

ஆடுமட்கலத்திகிரியொத்தலைந் ... *
தோடுநெஞ்சமுங்கவலையோர்ந்துனை ... *
நாடுமோதமிழ்க்கருவைநம்பனே ... *
யேடுசேர்மலர்க்களவிலீசனே ... (௭௫)

ஈசனேயிடத்திமயவல்லியி ... *
னேசனேயியற்கருவைநித்தனே ... *
பூசியேனுனைப்புனிதவாகமம் ... *
வாசியேன்பிறப்பென்றுமாயுமே ...(௭௬)

பிறவிமாயவுமருள்பெருக்கவுந் ... *
துறவியாய்வனந்துன்னல்வேண்டுமோ ... *
விறைவனெம்பிரான்களவிலீசனென்... ......*
றறையுமுன்னமேயனைத்துமெய்துமே ... (௭௭)

எய்தியென்செயுங்கருவையெம்பிரான் ... *
கொய்யுநாண்மலர்க்கொன்றைவேணியான் ...*
செய்யபாதமென்சென்னிவைக்கவே ... *
வெய்யகூற்றுவன்வீசுபாசமே... ...(௭௮)

பாசநீக்கிமூவகைப்பசுக்களை, ... ...*
மாசின்முத்தியாம்வனத்தின்மேய்த்திடு ... *
மீசன்மின்னனேரிடைச்சிகாதல ... *
னூசில்பால்வணத்தண்டர்நாதனே ... ...(௭௯)

அண்டகோளமுமகிலலோகமு ... *
மண்டுசெந்தழல்வடிவமானவன் ... *
மூண்டதக்கழற்கருவைமூர்த்தியைக் ... ..*
கண்டகண்ணிணைகளிதுளங்குமே... ...(௮௰)

(வேறு.)

ஆளங்குநெஞ்சமேதுயருறுவகையொன்றுசொல்வேன் ...
வளங்கொள்செந்தமிழ்க்கருவையம்பெரும்பதிமருவி ... ...
விளங்குபானிறமேனியன்றிருவடிதொழுதால் ... ... ...
அளந்துகாண்பருந்துறக்கவாழ்விம்மையினளிப்பான் ... (௮

இம்மையின்பமுமிறுதியின்முத்தியுமளிக்கு ... ... ...
தம்மையாளுடைநாயகன்கருவைநன்னகரிற் ... ... *
பொம்மைவெம்முலைக்கொடியொடுமினிதுவீற்றிருக்க ... ...
விம்மிமானிடர்வெந்துயருழப்பதென்விரகே ... ... ...(௮௨

விரகினாற்சிலர்செய்திடும்வினைகளுமுண்டோ ... ... *
மருவியம்பரமறைந்துநின்றூட்டுவான்போல ... ... *
உரககங்கணக்கருவையானொருவனின்றூட்டப் ... ... *
பரவைசூழ்நிலமன்மதைப்பரம்பெலாநடிக்கும்.... ... ..(௮௩

நடித்ததாள்களுநகைமணிமுறுவலுமுகமும் ... ... *
பொடித்தவேர்வெழும்புருவமுமருள்விலோசனமு ... ...*
முடித்ததண்பிறைவேணியுமகலிங்கன்மழுமான் ... ..... *
பிடித்தசெங்கையுங்காண்பவர்புவியிடைப்பிறவார் ... ... (௮௪)

பிறந்தயாக்கைகளளப்பிலபெருங்கடற்புவிக்குள் ... ..... *
இறந்தும்பாயவல்லாலவற்றெய்தியதுண்டோ ... ... ... *
சுறந்தபானிறவண்ணனைக்கருத்துறவிருத்திச் ... ... *
சிறந்தயாக்கையீதிதற்குநான்செய்வதுமுளதோ... ... ... (௮௫)

உள்ளதில்லதென்றுணாத்திடும்பொருளைவுத்துணராக் ... ...*
கள்ளர்நாவினிலிருந்திடாக்களாநறுங்கனியைத் ... ... *
தெள்ளுசெந்தமிழ்க்கருவையிற்சினகரம்புகுந்தும் ... ... *
மெள்ளநான்சென்றுகாண்டலுந்தீர்ந்ததுவிடாயே .... ...(௮௬)

விடக்கைமும்மலக்குழிசியைவிளிந்தபின்றீண்டாத் ... ... *
துடக்கைநாய்க்கணந்துணங்கையிட்டாடுறுமரங்கை ... *
நடக்குஞ்சூத்திரப்பாவையைநான்சுமந்துழலல் ... ... ...*
கடக்கநீக்கியன்றருளுவைகருவையுத்தமனே ... ... (௮௭)

...வாளரா முடித்தபால்வண்ணனேயுனது ... ... ...*
...வேண் டிவதன்றிமெய்நரகிடைப்படினு ... ... ...*
...வேண்டிலேன்றுறக்கமும்வேண்டிலேன்முனிவர் ... ... ...*
...வேண்டிலேன்வேண்டிலேன்றிசாதிபர்சிறப்பே... ... ...(அஅ)

...க்கத்தக்கது கருவையான்றிருவடிநேய... ... ... ... ...*
...க்கத்தக்கதுமற்றுளசமயத்தின்மயக்கம்... ... ... ... ...*
...றக்கத்தக்கதிவ்வுடம்பையானென்றுறுதொடர்பு... ... ... ...*
...க்கத்தக்கதுசிவானந்தவாரியின்பெருக்கே ... ... ... ... (அகூ)

...ருநாதல்தொண்டனுதினம்பேதைநெஞ்சடியேன்... ... ... ...*
...கிநாடவும்வெளிப்படர்வுளையுளத்துணர்ந்தேன் ... ... ... ...*
...ருகளுரவங்காண்பதற்கென்றெதிர்ந்திடுவாய்... ... ... ...*
...ருதகண்டனேகருவையிற்களாநறுங்கனியே... ... ... ...(கூய)

(வேறு.)

...னிவுறுமனங்கனியநின்பெருங்கருணைதந்தவாபோற்றிநாயினேன்... ......*
...னியபாடலாற்களவிலீசனென்றேத்தநாத்தருமிறைவபோற்றிவால் ... ...*
...னிநிலாவுடன்கங்கைதுன்றுசெம்பவளவார்சடைப்பரமபோற்றிவிற்......*
...னிவுறுமுனம்புரமெரித்திடக்குருத்தவாணகைக்குழகபோற்றியே ... (கூக)

...ழவிவெண்ணிலா வளையவெண்ணகைக்கொடியிடத்துவாழ்குருசில் போற்றி
...ழையதீவினைப்பகைதொலைத்திடும்பாவநாசனேபோற்றிகாய்சினத்...[யென்
...ழுவையின்வரித்தோலசைத்தபட்டுடைமருங்கினேய்போற்றிசெந்தமிழ்க் *
...முமலப்பதிக்கபுணியன்புகழ்களவினீழலிற்கடவுள்போற்றியே... ... கூஉ)

...டையுகத்தினிற்பொழில்களேழையுங்கனல்கொளுத்தியகடலையம்பலத் ...*
...டலையூசியென்னம்மைகாணநின்றாடுமையமேபோற்றிபோற்றிநெஞ்......*
...டைவிடாமலுன்சரணபங்கயத்திருக்கநல்கியவிறைவபோற்றிமால்.........*
...டையின்மேவியேகருவைமாநகர்வீதிவாய்வரும்விமலபோற்றியே ...(கூ௩)

...மலபோற்றிநின்பெருமைநாரணன்விரிஞ்சனாதியோரறியகிற்றிலர்... ...*
...மலபோற்றிநானறியும்வண்ணமுன்னறிவுதந்தருளறிவபோற்றிதண் ... ...*
...மலவாவிசூழ்கருவைமாநகர்க்களவினீழல்வாழ்காலகாலனே.......,.........*
...மயமால்வரைக்குமரியொப்பனைக்கினியகாதலாபோற்றியெந்தையே...(கூ௪)

ஏத்து மடியவ ரீரேழுலகினை யும்படைத்துங் ... ... ... ... *
காத்து மழித்துந் திரிபவ ராங்கமழ் பூங்கடம்பு ... ... ... *
சாத்துங் குழலணங் கேமண நாறுநின் றாளிணைக்கென் ... *
னாத்தங்கு புன்மொழி யேறியவாறு நகையுடைத்தே ... ...(உசு)

உடைத்தனை வஞ்சப் பிறவியை யுள்ள முருகுமன்பு ... ... *
படைத்தனை பத்ம பதயுகஞ் சூடும் பணியெனக்கே ... ... ...*
யடைத்தனை நெஞ்சத் தழுக்கை யெல்லாநின் னருட்புனலாற் *
றுடைத்தனை சுந்தரி நின்னரு ளேதென்று சொல்லுவதே ... (உஎ)

சொல்லும் பொருளு மெனநட மாடுந் துணைவருடன் ... ... *
புல்லும் பரிமளப் பூங்கொடியே நின் புதுமலர்த்தா ... ... *
ளல்லும் பகலுந் தொழுமவர்க் கேயழி யாவரசுஞ் ... ... ... *
செல்லுந் தவநெறி யுஞ்சிவ லோகமுஞ் சித்திக்குமே ... .. (உஅ)

சித்தியுஞ் சித்தி தருந்தெய்வ மாகித் திகழும்பரா ... ... ... *
சத்தியுஞ் சத்தி தழைக்குஞ் சிவமுந் தவமுயல்வார் ... ... ... *
முத்தியு முத்திக்கு வித்தும் வித்தாகி முளைத்தெழுந்த ... ...*
புத்தியும் புத்தியி னுள்ளே புரக்கும் புரத்தையன்றே ... (உகூ)

அன்றே தடுத்தென்னை யாண்டுகொண் டாய்கொண்ட தல்லவென்கை..
நன்றே யுனக்கினி நானென்செயினு நடுக்கடலுட் ... .. *
சென்றே விழினுங் கரையேற்றுகைநின் றிருவுளமே ... ... *
யொன்றே பலவுரு வேயரு வேயென் னுமையவளே ... ... (ஙய)

உமையு முமையொரு பாகனு மேக வுருவில்வந்திங் ... ... ...*
கெமையுந் தமக்கன்பு செய்யவைத் தாரினி யெண்ணுவதோர் ... *
சமையங்களு மில்லை யீன்றெடுப் பாளொரு தாயுமில்லை ... ... *
யமையு மமையுறு தோளியர் மேல்வைத்த வாசையுமே ... ...(ஙக)

ஆசைக் கடலி லகப்பட் டருளற்ற வந்தகன்கைப் ... ... ... *
பாசத்தி லல்லற் படவிருந் தேனைநின் பாதமென்னும் ... ... *
வாசக் கமலந் தலைமேல் வலியவைத் தாண்டுகொண்ட ... ... *
நேசத்தை யென்சொல்லு வேனீசர் பாகத்து நேரிழையே...... (ஙஉ)

இழைக்கும்வினைவழி யேயடுங்கால னெனைநடுங்க
அழைக்கும்பொழுதுவந் தஞ்சலென் பாயத்தர் சித்தமெல்லாங்
குழைக்குங்களபக் குவிமுலையாமளைக் கோமளமே
உழைக்கும்பொழுதுன்னை யேயன்னை யேயென்ப னோடிவந்தே (௩௩)

வந்தேசரணம் புகுமடியாருக்கு வானுலகந்
தந்தேபரிவொடு தான்போயிருக்குஞ் சதுர்முகமும்
பைந்தேனலங்கற் பருமணியாகமும் பாகமும்பொற்
செந்தேன்மலரு மலர்கதிர்ஞாயிறுந் திங்களுமே (௩௪)

திங்கட்பகவின் மணநாறுஞ்சீறடி சென்னிவைக்க
எங்கட்கொருதவ மெய்தியவாவெண் ணிறந்தவிண்ணோர்
தங்கட்குமிந்தத் தவமெய்துமோதரங் கக்கடலுள்
வெங்கட்பணியணை மேற்றுயில்கூரும் விழுப்பொருளே (௩௫)

பொருளேபொருண்முடிக் கும்போகமேயரும் போகஞ்செய்யு
மருளேமருளில் வருந்தெருளேயென் மனத்துவஞ்சத்
திருளேதுமின்றி யொளிவெளியாகி யிருக்குமுன்னை
யருளேதறிகின்றிலே னம்புயாதனத் தம்பிகையே (௩௬)

கைக்கேயணிவது கன்னலும்பூவுங் கமலமன்ன
மெய்க்கேயணிவது வெண்முத்துமாலை விடவரவின்
பைக்கேயணிவது பன்மணிக்கோவையும் பட்டுமெட்டுத்
திக்கேயணியுந் திருவுடையானிடஞ் சேர்பவளே (௩௭)

பவளக்கொடியிற் பழுத்தசெவ்வாயும் பனிமுறுவற்
றவளத்திருநகை யுந்துணையாவெங்கள் சங்கரனைத்
துவளப்பொருது துடியிடைசாய்க்குந் துணைமுலையா
ளவளைப்பணிமின்கண் டீரமராவதி யாளுகைக்கே (௩௮)

ஆளுகைக்குன்ற னடித்தாமரைகளுண் டந்தகன்பான்
மீளுகைக்குன்றன் விழியின்கடையுண்டு மேலிவற்றின்
மூளுகைக்கென்குறை நின்குறையேயன்று முப்புரங்கண்
மாளுகைக்கம்பு தொடுத்தவில்லான் பங்கில் வாணுதலே (௩௯)

வாணுதற் கண்ணியை விண்ணவர் யாவரும் வந்திறைஞ்சிப் ... *
பேணுதற் கெண்ணிய வெம்பெருமாட்டியைப் பேதைநெஞ்சிற் *
காணுதற் கண்ணிய ளல்லாதகன்னியைக் காணுமன்பு... ... *
பூணுதற் கெண்ணிய வெண்ணமன்றோமுன் செய்புண்ணியமே. (௬௰)

புண்ணியஞ்செய்தன மேமனமேபுதுப் பூங்குவளைக்... ... *
கண்ணியஞ் செய்ய கணவருங்கூடிநங் காரணத்தா .. ... *
னண்ணியிங்கேவந்து தம்மடியார்க ணடுவிருக்கப் ... ... *
பண்ணிநஞ்சென்னியின் மேற்பத்மபாதம் பதித்திடவே .. (௬௧)

இடங்கொண்டுவிம்மி யிணைகொண்டிறுகி யிளகிமுத்து ... *
வடங்கொண்டகொங்கை மலைகொண்டிறைவர் வலியநெஞ்சை... *
நடங்கொண்டகொள்கை நலங்கொண்டநாயகி நல்லரவின் .. *
படங்கொண்டவல்குற் பனிமொழிவேதப் பரிபுரையே .. (௬௨)

பரிபுரச்சீறடிப் பாசாங்குசைபஞ்ச பாணியின்சொற் ... *
திரிபுரசுந்தரி சிந்தூரமேனிய டீமைநெஞ்சிற் ... *
புரிபுரவஞ்சரை யஞ்சக்குனி பொருப்புச்சிலைக்கை *
யெரிபுரைமேனி யிறைவர்செம்பாகத் திருந்தவளே... (௬௩)

தவளேயிவளெங்கள் சங்கரனார்மனை மங்கலமாம்... ... *
அவளேயவர்தமக் கன்னையு மாயின ளாகையினால் ... ... *
இவளேகடவு ளரியாவர்க்குமேலை யிறைவியுமாந் ... *
துவளேனினியொரு தெய்வமுண்டாகமெய்த் தொண்டுசெய்தே. ௬௪

தொண்டுசெய்யாதுநின் பாதந்தொழாது துணிந்திச்சையே ... *
பண்டுசெய்தாருள ரோவிலரோவப் பரிசடியேன் ... ...*
கண்டுசெய்தாலது கைதவமோவன்றிச் செய்தவமோ ... *
மிண்டுசெய்தாலும் பொறுக்கைநன்றேபின் வெறுக்கையன்றே (௬௫)

வெறுக்குந்தகைமைகள் செய்யினுந்தம்மடி யாரைமிக்கோர் ... *
பொறுக்குந்தகைமை புதியதன்றேபுது நஞ்சையுண்டு... ...*
கறுக்குந்திருமிடற் றானிடப்பாகங் கலந்தபொன்னே ... *
மறுக்குந்தகைமைகள் செய்யினும்யானுன்னை வாழ்த்துவனே (௬௬)

வாழும் படியொன்று கண்டுகொண்டேன்மனத் தேயொருவர் ...... *
வீழும் படியன்று விள்ளும்படியன்று வேலைநில ... ...... ... ... *
மேழும் பருவரை யெட்டுமெட்டாம லிரவுபகற் ... ...... ... ... *
சூழுஞ் சுடர்க்கு நடுவேகிடந்து சுடர்கின்றதே ...... ... ... (சஎ)

சுடருங் கலைமதி துன்றுஞ்சடைமுடிக் குன்றிலொன்றிப் ...... ... *
படரும் பரிமளப் பச்சைக்கொடியைப் பதித்துநெஞ்சி ...... ... *
லிடருந் தவிர்த்திமைப் போதிருப்பார்பின் னெய்துவரோ... .. ...*
குடருங் கொழுவுங் குருதியுந்தோயுங் குரம்பையிலே... ... ..(சஅ)

குரம்பை யடுத்துக் குடிபுக்கவாவிவெங் கூற்றுக்கிட்ட ...... ......*
வரம்பை யடுத்து மறுகுமப்போது வளைக்கையமைத்... ...... ...*
தரம்பை யடுத்தவ ரிவையர்சூழவந் தஞ்சலென்பாய்... .. ... ...*
நரம்பை யடுத்த விசைவடிவாய்நின்ற நாயகியே .. ...... ... (சகூ)

நாயகி நான்முகி நாராயணிகை நளினபஞ்ச ... ... *
சாயகி சாம்பவி சங்கரிசாமளை சாதிநச்சு ... ... *
வாயகி மாலினி வாராகிசூலினி மாதங்கியென் ... ...*
றாயகி யாதி யுடையாள்சரண மரணமக்கே ... ...(ரு0)

அரணம் பொருளென் றருளொன்றிலாத வசுரர்தங்கண் ...*
முரணன் றழிய முனிந்தபெம்மானு முகுந்தனுமே ... *
சரணஞ் சரண மெனநின்றநாயகி தன்னடியார் ... *
மரணம் பிறவி யிரண்டுமெய்தாரிந்த வையகத்தே ... (ருக)

வையந்துரக மதகரிமாமகு டஞ்சிவிகை ... ... ... *
பெய்யுங் கனகம் பெருவிலையாரம் பிறைமுடித்த ... ... *
வையன் திருமனை யாளடித்தாமரைக் கன்புமுன்பு ... *
செய்யுந் தவமுடை யார்க்குளவாகிய சின்னங்களே ... (ருஉ)

சின்னஞ்சிறிய மருங்கினிற்சாத்திய செய்யபட்டும் ... ...*
பென்னம்பெரிய முலையுமுத்தாரமும் பிச்சிமொய்த்த ... *
கன்னங்கரிய குழலுங்கண்மூன்றுங் கருத்தில்வைத்துத் ... *
தன்னந்தனியிருப் பார்க்கிதுபோலுந் தவமில்லையே ... (ருங)

பாரும்புனலுங் கனலும்வெங்காலும் படர்விசும்பு ... ... ... *
மூருமுருகு சுவையொளியூ றொலி யொன்றுபடச் ... ... *
சேருந்தலைவி சிவகாமசுந்தரி சீறடிக்கே ... ... ... ...
சாருந்தவமுடை யார்படையாத தனமில்லையே ... ... ... (௬௮)

தனந்தருங்கல்வி தருமொருநாளுந் தளர்வறியா ... ... ... *
மனந்தருந்தெய்வ வடிவுந்தருநெஞ்சில் வஞ்சமில்லா ... ... *
வினந்தருநல்லன வெல்லாந்தருமன்ப ரென்பவர்க்கே ... ... *
கனந்தரும்பூங்குழ லாளபிராமி கடைக்கண்களே ... ... (௬௯)

கண்களிக்கும்படி கண்டுகொண்டேன்கடம் பாடவியிற் ... ... *
பண்களிக்குங்குரல் வீணையுங்கையும் பயோதரமு ... ... *
மண்களிக்கும்பச்சை வண்ணமுமாகி மதங்கர்குலப் ... ... *
பெண்களிற்றோன்றிய வெம்பெருமாட்டிதன் பேரழகே ... (௭௰)

அழகுக்கொருவரு மொவ்வாதவல்லி யருமறைகள் ... ... ... *
பழகிச்சிவந்த பாதாம்புயத்தாள் பனிமாமதியின் ... ... ... *
குழவித்திருமுடிக் கோமளயாமளைக் கொம்பிருக்க ... ...
விழவுற்றுநின்றநெஞ் சேயிரங்கேலுனக் கென்குறையே ... (௭௧)

என்குறைதீரநின் றேத்துகின்றேனினி யான்பிறக்கி ... ... *
னின்குறையேயன்றி யார்குறைகாணிரு நீள்விசும்பின் ... ... *
மின்குறைகாட்டி மெலிகின்றநேரிடை மெல்லியலாய் ... ... *
தன்குறைதீரவெங் கோன்சடைமேல்வைத்த தாமரையே ... (௭௨)

தாமங்கடம்பு படைபஞ்சபாணந் தனுக்கரும்பு ... ... ... *
யாமம்பயிரவ ரேத்தும்பொழுது மெமக்கென்றுவைத்த ... ... *
சேமந்திருவடி செங்கைகணான்கொளி செம்மையம்மை ... ... *
நாமந்திரிபுரை யொன்றோடிரண்டு நயனங்களே ... ... (௭௩)

நயனங்கண்மூன்றுடை நாதனும்வேதமு நாரணனு ... ... *
மயனும்பரவு மபிராமவல்லி யடியிணையைப் ... ... ... *
பயனென்றுகொண்டவர் பாவையராட்டும் பாடவும்பொற் ... *
சயனம்பொருந்து தமனியக்காவினிற் றங்குவரே ... ... (௭௪)

தங்குவர் கற்பகத் தாருவினீழலிற் றாயரின்றி
மங்குவர் மண்ணில் வழுவாப் பிறவியை மால்வரையும்
பொங்குவராழியு மீரேழ்புவனமும் பூத்தவுந்திக்
கொங்குவர் பூங்குழலாடிரு மேனி குறித்தவரே. (எரு)

குறித்தேன் மனத்தினின் கோலமெல்லாநின் குறிப்பறிந்து
மறித்தேன் மறலி வருகின்ற நேர்வழி வண்டுகிண்டி
வெறித்தேனவிழ்கொன்றை வேணிப்பிரானொரு கூற்றைமெய்யிற்
பறித்தே குடிபுகு தும்பஞ்ச பாணபயிரவியே. (எசு)

பயிரவிபஞ்சமி பாசாங்குசைபஞ்ச பாணிவஞ்சர்
குயிரவி யுண்ணு முயர்சண்டி காளி யொளிருங்கலா
வயிரவி மண்டலி மாலினி சூலி வராகியென்றே
செயிரவி நான்மறை சேர்திருநாமங்கள் செப்புவரே. (எஎ)

செப்புங் கனகக் கலசமும் போலுந் திருமுலைமேல்
லப்புங்களப வபிராமவல்லி யணிதரளக்
கொப்பும் வயிரக் குழையும் விழியின் கொழுங்கடையுந்
துப்பு நிலவு மெழுதிவைத்தேனென் றுணைவிழிக்கே. (எஅ)

விழிக்கே யருளுண்டபிராம வல்லிக்கு வேதஞ்சொன்ன
வழிக்கே வழிபட நெஞ்சுண்டெமக்கவ் வழிகிடக்கப்
பழிக்கேசுழன்று வெம்பாவங்களே செய்து பாழ்நரகக்
குழிக்கே யழுந்துங் கயவர்தம் மோடென்ன கூட்டினியே. (எகூ)

கூட்டியவாவென்னைத் தன்னடியாரிற் கொடியவினை
யோட்டியவாவென்க ணோடியவா தன்னையுள்ளவண்ணங்
காட்டியவா கண்ட கண்ணுமனமுங் களிக்கின்றவா
வாட்டியவா நடமாடகத்தாமரை யாரணங்கே. (அ௰)

அணங்கேயணங்குக ணின்பரிவாரங்க ளாகையினால்
வணங்கே னொருவரைவாழ்த்து கிலேனெஞ்சில் வஞ்சகரோ
டிணங்கே னெனதுன தென்றிருப்பார்சில ரியாவரொடும்
பிணங்கே னறிவொன்றி லேனென்கண் ணீவைத்த பேரளியே. (அக)

அளியார்கமலத்தி லாரணங்கே யகிலாண்டமுநின் ... ... ... *
ளொளியாகநின்ற வொளிர்திருமேனியை யுள்ளுதொறுங் ... *
களியாகியந்தக் கரணங்கள்விம்மிக் கரைபுரண்டு ... ... *
வெளியாய் விடினெங்ஙனே மறப்பேனின் விரகினையே ... (௮௨)

விரவும்புதுமலரிட்டுநின்பாத விரைக்கமலம் ... ... *
இரவும்பகலு மிறைஞ்சவல்லாரிமை யோரெவரும் ... ... *
பரவும்பதமு மயிராவதமும் பகீரதியு ... ... *
முரவுங்குலிசமுங் கற்பகக்காவு முடையவரே ... ... (௮௩)

உடையாளையொல்குசெம் பட்டுடையாளை யொளிர்மதிச்செஞ் .. *
சடையாளை வஞ்சகர் நெஞ்சடையாளைத் தயங்குநுண்ணூ ... *
லிடையாளையெங்கள் பெம்மானிடையாளையிங் கென்னையினிப் . *
படையாளையுங்களை யும்படையாவண்ணம் பார்த்திருமே ...(௮௪)

பார்க்குந்திசைதொறும் பாசாங்குசமும் பனிச்சிறைவண் ... *
டார்க்கும்புதுமல ரைந்துங்கரும்புமென் னல்லலெல்லாந் ... *
தீர்க்குந்திரிபுரை யாடிருமேனியுஞ் சிற்றிடையும் ... *
வார்க்குங்குமமுலை யும்முலைமேன் முத்து மாலையுமே ... (௮௫)

மாலயன்றேட மறைதேட வானவர் தேடநின்ற ... *
காலையுஞ்சூடகக் கையையுங்கொண்டு கதித்தகப்பு ... ... *
வேலைவெங் காலனென் மேல்விடும்போது வெளிநில்கண்டாய் .. *
பாலையுந்தேனையும் பாகையும்போலும் பணிமொழியே ... (௮௬)

மொழிக்குநினைவுக்கு மெட்டாதநின்றிரு மூர்த்தியென்றன் ... *
விழிக்கும்வினைக்கும் வெளிநின்றதால்விழி யான்மதனை ... *
யழிக்குந்தலைவ ரழியாவிரதத்தை யண்டமெல்லாம் ... *
பழிக்கும்படியொரு பாகங்கொண்டாளும் பராபரையே ... (௮௭)

பரமென் றுனையடைந் தேன்றமியேனுமுன் பத்தருக்குட் ... *
டரமன்றிவனென்று தள்ளத்தகாது தரியலர்தம் ... ... *
புரமன் றெரியப் பொருப்புவில்வாங்கிய போதிலயன் ... *
சிரமொன்று செற்றகை யானிடப்பாகஞ் சிறந்தவளே ... ... (௮௮)

சிறக்குங் கமலத் திருவேநின் சேவடி சென்னிவைக்கத் ... ... *
துறக்கந் தருநின் றுணைவரு நீயுந் துரியமற்ற ... ... *
உறக்கந் தரவந் துடம்போ டுயிருற வற்றறிவு ... ... ... ... *
மறக்கும் பொழுதென் முன்னே வரல்வேண்டும் வருந்தியுமே (௮௯)

வருந்தா வகையென் மனத்தா மரையினில் வந்துபுகுந் ... *
திருந்தாள் பழைய விருப்பிட மாக வினியெனக்குப் ... ... *
பொருந்தா தொருபொரு ளில்லைவிண் மேவும் புலவருக்கு ... *
விருந்தாக வேலை மருந்தா னதைநல்கு மெல்லியலே ... ... (௯௰)

மெல்லிய நுண்ணிடை மின்னனை யாளை விரிசடையோன் ... *
புல்லிய மென்முலைப் பொன்னனை யாளைப் புகழ்ந்துமறை ... *
சொல்லிய வண்ணந் தொழுமடி யாரைத் தொழுமவர்க்குப் ... *
பல்லிய மார்த்தெழ வெண்பக டூரும் பதந்தருமே ... (௯௧)

பதத்தே யுருகிநின் பாதத் திலேமனம் பற்றியுன்ற ... ... *
னிதத்தே யொழுக வடிமைகொண் டாயினி யானொருவர் ... ... *
மதத்தே மதியயங் கேனவர் போன வழியுஞ்செல்லேன் ... *
முதற்றேவர் மூவரும் யாவரும் போற்று முகிழ்நகையே ... (௯௨)

நகையே யிஃதிந்த ஞால மெல்லாம்பெற்ற நாயகிக்கு ... ... *
முகையே முகிழ்முலை மானே முதுகண் முடிவிலந்த ... ... *
வகையே பிறவியும் வம்பே மலைமக ளென்பதுநாம் ... ... ... *
மிகையே யவடன் றகைமையை நாடி விரும்புவதே ... ... (௯௩)

விரும்பித் தொழுமடி யார்விழி நீர்மல்கி மெய்புளகம் ... ... *
அரும்பித் ததும்பிய வானந்த மாகி யறிவிழந்து ... ... *
சுரும்பிற் களித்து மொழிதடு மாறிமுன் சொன்னவெல்லாந் ... *
தரும்பித்த ராவரென் றாலபி ராமி சமயநன்றே ... ... (௯௪)

நன்றே வருகினுந் தீதே விளைகினு நானறிவ ... ... ... ... *
தொன்றேயு மில்லை யுனக்கே பரமெனக் குள்ளதெல்லா ... ... *
மன்றே யுனதென் றளித்துவிட் டேனழி யாதகுணக் ... ... *
குன்றே யருட்கட லேயிம வான்பெற்ற கோமளமே ... ... (௯௫)

கோமள வல்லியை யல்லியந்தாமரைக் கோயில்வைகும் ... ... *
யாமள வல்லியை யேதமிலாளை யெழுதரிய ... ... ... *
சாமள மேனிச் சகலகலாமயிற் றன்னைத்தம்மா ... ... ... *
லாமள வுந்தொழு வாரெழுபாருக்கு மாதிபரே ... (௯௬)

ஆதித்தனம்புலி யங்கிகுபேர னமரர்தங்கோன் ... ... *
போதிற்பிரமன் புராரிமுராரி பொதியமுனி ... ... ... *
காதிப்பொருபடைக் கந்தன்கணபதி காமன்முதற் ... ... *
சாதித்தபுண்ணிய ரெண்ணிலர்போற்றுவர் தையலையே ... (௯௭)

தைவந்துநின்னடித் தாமரைசூடிய சங்கரற்குக் ... ... ... *
கைவந்ததீயுந் தலைவந்தவாறுங் கரந்ததெங்கே ... ... ... *
மெய்வந்தநெஞ்சினல் லாலொரு காலும்விரகர்தங்கட் ... ... *
பொய்வந்தநெஞ்சிற் புகவறியாமடப் பூங்குயிலே ... ...(௯௮)

குயிலாயிருக்குங் கடம்பாடவியிடைக் கோலவியன் - - - *
மயிலாயிருக்கு மிமயாசலத்திடை வந்துதித்த - - - *
வெயிலாயிருக்கும் விசும்பிற்கமலத்தின் மீதன்னமாங் - - *
கயிலாயருக்கன் றிமவானளித்த கனங்குழையே - - - (௯௯)

குழையைத் தழுவிய கொன்றையந் தார்கமழுங் கொங்கைவல்லி - *
கழையைப் பொருத திருநெடுந்தோளுங் கருப்புவில்லும் - - *
விழையைப் பொருதிற வேரியம்பாணமும் வெண்ணகையு - *
முழையைப் பொருகண்ணு நெஞ்சிலெப்போது முதிக்கின்றவே (௱)

ஆத்தாளை யெங்க ளபிராம வல்லியை யண்டமெல்லாம் - - *
பூத்தாளை மாதுளம் பூநிறத்தாளைப் புவியடங்கக் - - - - *
காத்தாளை யங்குச பாசாங்குசமும் கருப்புமங்கை - - - *
சேர்த்தாளை முக்கண்ணி யைத்தொழுவார்க்கொரு தீங்கிலையே - (௱௧)

அபிராமிபட்ட ரருளிச்செய்த
அபிராமியந்தாதி
முற்றிற்று.

கடவுள் துணை.

V. Sangavelumudr

# கந்தரந்தாதி

## மூலபாடம்.

சுப்பிரமணியசுவாமிகள்வரப்ரசாதியாய்த்திருவண்ணா
மலையில் எழுந்தருளியிருந்த

## அருணகிரிநாதர்

அருளிச்செய்தது.

இஃது,

சிதம்பரம்

## கருணாநந்தசுவாமிகளால்

பரிசோதிக்கப்பட்டு,

சிந்தாத்திரிப்பேட்டை

நெல்லுமண்டி

## வெங்கட்டராமமுதலியாரவர்கள்

குமாரராகிய

## கேசவமுதலியாரவர்களது

பிரபாகர அச்சுக்கூடத்திற்

பதிப்பிக்கப்பட்டது.

---

பிங்கள௵ - மாசிமீ.

---

மோப்பேர், சாமிநாய்க்கர் - வீதியில் - நெம்பர்- ௨௩.

1857

சிவமயம்.

# கந்தரந்தாதி.

## காப்பு.

வாரணத்தானையயனைவிண்ணோரைமலர்க்கரத்து ... *
வாரணத்தானைமகத்துவென்றோன்மைந்தனைத்துவச ... *
வாரணத்தானைத்துணைநயந்தானைவயலருணை ... *
வாரணத்தானைத்திறைகொண்டயானையைவாழ்த்துவனே ... *

(இதுவுமது)

உண்ணாமுலையுமைமைந்தாசரணம்பரருயிர்சேர் ... *
உண்ணாமுலையுமைமைந்தாசரணமருணைவெற்பாள் ... *
உண்ணாமுலையுமைமைந்தாசரணந்தனமுமொப்பில் ... *
உண்ணாமுலையுமைமைந்தாசரணஞ்சரணுனக்கே ... *

(நூல்)

திருவாவினன்குடிபங்காளரொண்முதுசீருரைச ... *
திருவாவினன்குடிவானார்பரங்குன்றுசீரலைவாய் ... *
திருவாவினன்குடியேரகங்குன்றுதொறாடல்சென்ற ... *
திருவாவினன்குடிகொண்டதண்கார்வரைசெப்புமினே ... (க)

செப்புங்கவசங்கரபாலகதெய்வவாவியம்பு ... *
செப்புங்கவசங்கரிமருகாவெனச்சின்னமுன்னே ... *
செப்புங்கவசம்பெறுவார்கணுந்தெய்வயானைதனச் ... *
செப்புங்கவசம்புனைபுயன்பாதமென்சென்னியதே ... (உ)

சென்னியமோகந்தவிராமுதோகண்டிகிரிவெண்ணெய்ச் ... *
சென்னியமோகம்படஊதெனத்தொனிசெய்தபஞ்ச ... *
சென்னியமோகந்தரம்புனைத்தேன்புணர்தேவத்தெய்வச் ... *
சென்னியமோகம்பணிபணியேரகத்தேமொழிக்கே ... (ங)

தேமொழிபத்தம்பெறவோர்தனக்கன்றுசேணுலகந் ... ... *
தேமொழிபத்தஞ்சினங்காட்டவுணரைச்சேமகரத் ... *
தேமொழிபத்தம்புயமவர்சூடிகைசிந்தவென்ற ... ... *
தேமொழிபத்தம்பதினாலுலகுமந்தித்ததொன்றே ... (௪)

தித்தவித்தாரமணித்தணைத்தேவர்வணங்கமுன்போ ... *
திந்தவித்தாரகைமைந்தர்செந்தூர்க்கந்தர்சிந்துரவா... ... *
தித்தவித்தாரமுடையாரருள்வெள்ளந்தேக்கியன்பு ... *
தித்தவித்தாரந்தனிவீடுறத்துக்கச்செவ்வணலே ... ... (௫)

செவ்வந்திநீலப்புயமுருகாபத்தர்சித்தமெய்யிற் ... ... *
செவ்வந்திநீலத்தையுற்றருள்வாய்திங்கட்சேய்புனைந்த ... *
செவ்வந்திநீலத்தொருபாகர்போன்றதினிச்சிந்தியார் ... *
செவ்வந்திநீலத்திணிமுற்றுதிமிரமுமே ... ... (௬)

திமிரத்திமிரத்தரங்ககோபசெவ்வேலகைவேல் ... *
திமிரத்திமிரக்குலாந்தகவரைத்தேன்பெருகுந் ... ... *
திமிரத்திமிரத்தனையாவியாளுமென்சேவகனை ... ... *
திமிரத்திமிரக்கனலாயசந்தனசீதளமே... ... ... (௭)

சீதனங்கோடுபுயங்கைகொண்டார்தந்திருமருக ... *
சீதனங்கோடுமுடியாளர்சேய்தனக்கேயுளதோ ... ... *
சீதனங்கோடுனிதருமென்பார்தொழுந்தேவிபெறுஞ் ... *
சீதனங்கோடுகொடிவேன்மயூரஞ்சிலையாசே ... (௮)

சிலைமதனம்படுமாறெழுஞ்சேய்மயிலுச்சிட்டவெச் ... *
சிலைமதனம்படுசிந்துவையிந்துவைச்செய்வதென்யான் ... *
சிலைமதனம்படுகாட்டுவர்கேளிருஞ்செங்கழுநீர்ச் ... ... *
சிலைமதனம்படுதாமரைவாவிதிரள்சங்கமே ... ... ... (௯)

திரளக்கரக்கனைவென்கண்டவேலன்றிசைமுகன்மால் ... *
திரளக்கரக்கனையாம்பாடநாடுதல்செய்யசங்க ... ... *
திரளக்கரக்கனைகாண்பான்கைந்நீத்திசைவார்பணிக்க ... *
திரளக்கரக்கனைவானீட்டுமைந்தர்புந்திக்கொக்குமே ... (௰)

திக்கத்திக்கோடுபடிபுடைச்சூழத்தெறியடபதி ... ... *
திக்கத்திக்கோடுகட்டடக்கடறடிசெப்படைச்சத் ... ... *
திக்கத்திக்கேடுதுறைத்திறத்தற்றறக்குறச்சத் ... ... *
திக்கத்திக்கோடுபறித்துக்கொடாதுசிறைபிறப்பே ... (௰௧)

சிறைவரவாமையிலேறிச்சிகரி கரவந்து ... ... ... *
சிறைவரவாமையில்கூட்பிடத்தானவர்சேனைகொண்ட ... *
சிறைவரவாமையில்வாங்கிதன்றேங்கழல்யாங்கழலச் ... *
சிறைவரவாமையினெஞ்சுடனேநின்றுந்தேங்குவதே... ...(௰௨)

தேங்காவனமும்மதகரிவேந்துடன்சேர்ந்தவின்றோர்..... ... *
தேங்காவனமுனையவ்வெற்றணிவெனுஞ்சேயிடமேல் ... *
தேங்காவனமுந்தளர்நடையாடஞ்சல்செண்பகப்பூந்... ... *
தேங்காவனமுஞ்சுழுநீரிலஞ்சியுஞ்செந்திலுமே... ... (௰௩)

செந்திலகத்தலர்வாணுதல்வேடிச்சிமுகபங்க ... ... *
செந்திலகத்தலர்தாடமென்றுநின்றசேயசங்க ..... *
செந்திலகத்தலர சிதந்தானைச்சிறையிட்டவேற் ... ... *
செந்திலகத்தலர்தூற்றிடுங்கேடுதிவாகருளே ... ... (௰௪)

திவாகரகன்னகொடைப்பாரியென்றுழறீனவெவ்வீர் ..... ... *
திவாகரகன்னபுரக்குள்ளூவல்லிசெருக்குரவந் ... ..... *
திவாகரகன்னசுகாசத்திறல்வேல்கொடென்புந் ..... *
திவாகரகன்னமறலியிடாதுயிர்ச்சேவலுக்கே... ... .... (௰௫)

சேவற்கொடியும்பணிசார்ந்தகனுந்திருகரத்துச் ... ... *
சேவற்கொடியுங்கொடுதசண்டாய்திணைசூழ்புனத்துச் ... *
சேவற்கொடியுந்திவளத்தவனுந்தந்திக்களபச் ... ..... *
சேவற்கொடியுமுடையாய்பிரியினுஞ்சேரினுமே... ..... (௰௬)

சேரிக்குவடு மொழிவிழிபாடனச் செவ்விகுறச் ... *
சேரிக்குவடு விளைந்ததன்றேநன்று தெண்டிரைநீர் ..... *
சேரிக்குவடு கடைநாளிலுஞ்சிதை வற்றசெவ்வேள் ..... *
சேரிக்குவடு புடைசூழ்புனத்திற் றிணைவிளைவே ... ... (௰௭)

திணைவேத்தியன்புசெய் வேந்தன்பதாம்புயத் திற்பத்திடந் ... *
திணைவேத்தியமுகந் தேற்றினர்மாற்றினர் பாற்றினர்தீத் ... *
திணைவேத்தியர்நெறி செல்லாகவிந்தியத் திந்தியினத் ... *
திணைவேத்தியங்குயிர் கூற்றூரிலூசிமிஞ் சீயுடம்பே ... (௰௮)

சீபனம்போதியெனவாய்புதைத்துச்செவிதாத்தோல் ... *
சீயனம்போதியமலையிற்றுதைசிறுமுனிவன் ... *
சீபனம்போதிஉடைந்தான்மருகன்செப்பத்திகைத்தார், ... *
சீயனம்போதிலராணுதிருக்கெவ்செயக்கற்றதே ... (௰௯)

செயதுங்கபத்திரிபோற்றும்டகிரதிகரசெவ்வேலற் ... *
செயதுங்கபத்திரிகுடுங்குறத்திதிறத்ததண்டஞ் ... *
செயதுங்கபத்திரிபத்திரிபாதத்தர்செல்வமென்பாற் ... *
செயதுங்கபத்திரியத்திரியாதிமொல் சிந்தையிலே ... (௨௰)

சிந்தாகுலவரிலசைப்பருமூருநஞ்சீருமென்றேர் ... *
சிந்தாகுலவரிட்க்கணுகாதருடமதலே ... *
சிந்தாகுலவரிம யூரவீரசெகமளப்பச் ... *
சிந்தாகுலவழிமருகாசூரனைச்செற்றவனே ... (௨௧)

செற்றைவரும்பழனஞ்சோலையிஞ்சிதிசழ்வரைமேற் ... *
செற்றைவரும்பழனிக்கந்தனேதற்றிடுநூற்றுவனாக் ... *
செற்றைவரும்பழநாடாளநாடிகண்செய்விடுத்த ... *
செற்றைவரும்பழமாங்கூடுவேமத்தினத்தில்வந்தே ... (௨௨)

தினகரரக்காதங்கெடுத்தார்குருதேசிகர்செந் ... *
தினகரரக்கரமாறுடையார்தெய்வவாரணத்துந் ... *
தினகரரக்கரசத்தியின்றுகிலத்தேவர்நஞ்ப ... *
தினகரரக்காதந்தீர்வரீர்வர்செகமெங்குமே ... (௨௩)

செகம்புரவார்கிளையெல்லாமருண்டுதிரண்டுகொண்ட ... *
செகம்புரவாதிங்ஙன்செய்வதென்னோமையல்செய்யவன்பு ... *
செகம்புரவாசமெனத்துயில்வார்செப்பபங்கபங்க ... *
செகம்புரவாமூரல்செந்தாரவென்னத்தெளிதருமே ... (௨௪)

தெளிதருமுத்தமிழ்வேதத்திற்றெய்வப்பலகையின்கீழ் ... *
தெளிதருமுத்தமிழாநித்தர்சேவிக்குநின்றதென்றாள் ... *
தெளிதருமுத்தமிழ்தேய்நகைவாசகச்செல்விநினைச் ... *
தெளிதருமுத்தமிழ்செவ்வேளிருப்பச்செவிகுனித்தே ..... (உ௫)

செவிக்குன்றவாரணநல்லிசைபூட்டவன்சிந்தையுட்பு ..... *
செவிக்குன்றவாரணபஞ்சலென்றுண்டருநீண்டகம்பச் ..... *
செவிக்குன்றவாரணவேலாயுகஞ்செற்றதுற்றனசஞ் ... *
செவிக்குன்றவாரணவள்ளிபொற்றூண்மற்றன்றேறுவதே ..... (உ௬)

தேடிக்கொடும்படைகைக்கூற்றடாதுளஞ்சேவினடைமீன் ... *
தேடிக்கொடும்படையாவெகுநாட்டன்சிறைகளையுந் ... *
தேடிக்கொடும்படையாவெகுநாட்டன்சிறைகளையுந் ... *
தேடிக்கொடும்படையின்கேள்வனற்றுணைசிக்கெனவே ..... (உ௭)

சிக்குறத்தத்தைவழங்காதிழந்துதியங்குவதே ... ... *
சிக்குறத்தத்தைவடிவேலெனார்சிலரம்பர்செந்தாள் ... *
சிக்குறத்தத்தைகடிந்தேனல்காக்குஞ்சிறுமிகுறிஞ் ... *
சிக்குறத்தத்தையணைசெலட்போதுந்திகழ்புயனே .. (உ௮)

திகழுமலங்கற்கழல்பணிவார்சொற்படிசெய்யவோ ... *
திகழுமலங்கற்பகலூர்செருத்தணிசெப்பிவெண்பூ ... *
திகழுமலங்கற்பருணேருவமன்றுவமண்சேனையுபா ... *
திகழுமலங்கற்குலைத்தானலதில்லைதெய்வங்களே ..... (உ௯)

தெய்வமணம்புணர்தில்வெளிசெய்ததேவனார்த் ... *
தெய்வமணம்புணராரிக்குமருகசெச்சையந்தார் ..... *
தெய்வமணம்புணருங்குழலாளைத்தினைப்புனத்தே ..... *
தெய்வமணம்புணர்கந்தனென்னீருஞ்சடைதறவே ... (௩௰)

தீதாவசவனுபவிக்காமன்னனிலும்வின்னனிலுஞ்செந் ... *
தீதாவசவணியாயஞ்செய்வதியமோதியங்காத் ... ... ...*
தீதாவசவணிமலர்செல்வாசாகிரசத்த ... ..... ... *
தீதாவசவன்புறப்பாடுணுமூத்திநித்திக்கவே ... (௩௧)

சித்திரகத்தத்துவருக்கிரபாலகசெச்சையுறிஞ் ... ... *
சித்திரகத்தத்துவரத்திபின்மாவென்றசேவகவிச் ... *
சித்திரகத்தத்துவர்வாய்மொழிமாதர்க்கெனுநினைவா ... *
சித்திரகத்தத்துவருத்தப்படாதுநற்சேதனமே ... (௬௨)

சேதனந்தந்துறையென்றுமைசெப்பங்குருந்துறைகாற் ... *
சேதனந்தந்துறையல்லிமன்வாவிச்செந்தூர்கருத ... *
சேதனந்தந்துறையென்றறியார்திறநீங்கிநெஞ்சே ... *
சேதனந்தந்துறைமற்றுமுற்றூடித்திரிகைவிட்டே ... (௬௩)

திரிகையிலாயிரவெல்லாழிமண்விண்டருசிரபாத் ... *
திரிகையிலயிரவானந்தநாடகிசேரிமகோத் ... ... *
திரிகைலயிலயிக்குலமந்தாசெந்திலாயொருகால் ... *
திரிகையிலாயிரக்கோடிசுற்றேழுந்திருத்துளமே ... (௬௪)

திருத்துளவாரியல்போதுடன்சேன்மழைதூங்குஞ்சங்க ... *
திருத்துளவாரித்துகண்டுயிலாதிசெயன்மாண்டசிந்தை ... *
திருத்துளவாரன்னைசெந்நாராயனன்னள்செம்மேனியெம்பு ... *
திருத்துளவார்சடையீசர்மைந்தாவினிச்செச்சைநல்கே ... (௬௫)

செச்சையவாவிகலயில்வாயுடைச்சேடனிற்கச் ... ... *
செச்சையவாவிபருகுஞ்சிகாலசெங்கைவெந்தீ ... *
செச்சையவாவிவிடுகெனுஞ்செல்வநின்றாளணுகச் ... *
செச்சையவாவினுயிர்வாழ்வினியநஞ்சேர்ப்பினுமே ... (௬௬)

சீர்க்கைவனப்புமலர்வேங்கையாணவன்செஞ்சிலையோக் ... *
சீர்க்கைவனப்புனிதத்தவவேடன்றினைவளக்குஞ் ... ... *
சீர்க்கைவனப்புனமதருக்காட்டியசேய்தமிழ்நூற் ... *
சீர்க்கைவனப்புனிமிர்சடையோன்மகன்சிற்றடிக்கே ... (௬௭)

சிற்றம்பலத்தையரன்புநெய்நூற்றிரிசிந்தையிடுஞ் ... *
சிற்றம்பலத்தைவரஞானதீபமிட்டார்க்குப்பரி ... *
சிற்லம்பலத்தையருளுஞ்செந்தூரர்பகைக்குலமாஞ் ... *
சிற்றம்பலத்தைப்பதவரந்தோளிலிந்தீரமே ... (௬௮)

தீவரகந்தரீதாம்பகிராருறவானசெம்பொற் ..... ... ..... *
தீவரகந்தரியாநோர்ந்தபோதினிற்செச்சையவிர் ..... *
தீவரகந்தரிசிந்துராபாகசிவகரண ..... ... ... *
தீவரகந்தரிபுதிருனதடிசேமநட்பே ..... ..... (௮௯)

சேமரவிக்கம்படையாகவீசுபதேசமுன்னூற் ..... ... *
சேமரவிக்கம்பலந்தரிவாய்செருவாயவெஞ்சூர்ச் ..... *
சேமரவிக்கந்திரித்தாய்வருத்தியதன்றிறென்றல் ..... *
சேமரவிக்கப்புபவளிவிண்டிணைதெண்டிணையே ... (௯௰)

தெண்டன்புரந்தராக்குன்றில்வாழ்கந்தசிந்துவிலுக் ... *
தெண்டன்புரந்தரலோகஞ்செருத்துசெற்றோய்கலைவாய் ... *
தெண்டன்புரந்தரநற்கேள்சிறுவரமூச்செய்தெம்மை ..... *
தெண்டன்புரந்தரவின்படிநூக்கியதீரகே ..... (௯௧)

தீனந்தினத்துரைச்செல்வர்பாற்சென்றெனக்கென்பதோர் ... *
தீனந்தினத்துமுரானலஞ்சுடச்சேர்ந்துசுடுந் ..... *
தீனந்தினத்துணிகளைசெங்கோட்டினன்செந்திலந்நீர் ..... *
தீனந்தினத்துதவத்துப்பிரசாதஞ்செய்யவற்றே ..... (௯௨)

செய்யசெந்தாமரையில்லாதமாதுடன்செந்தினைசூழ் ... *
செய்யசெந்தாமரைமாஞர்சிலம்பிற்கலந்துறையுஞ் ... *
செய்யசெந்தாமரையுன்னுங்குமாரசிறுசதங்கைச் ... *
செய்யசெந்தாமரைசேர்வதென்றோவினைசெய்தொலைத்தே (௯௩)

சேதாம்பல்துறைவேறும்பணிகங்கைசெல்வநந்தன் ... *
சேதாம்பல்துறையாதசிற்றூபன்றிருமருக ... ... *
சேதாம்பல்துறைசெவ்வாய்க்குறத்திதிறத்தமுத்திச் ... *
சேதாம்பல்துறையீதென்றெனக்குபதேசநல்கே ... (௯௪)

தேசம்புகலவயிலேயெனச்சிறைபுக்கொருகந் ... ... *
தேசம்புகலவணைரிசெற்றனீசற்குப ... ... ... *
தேசம்புகலதிகவாசகன்சிறிதோர்கிலன்மாந் ... ... *
தேசம்புகலசமுதவிமானைச்செருச்செய்வதே ..... (௯௫)

செப்பத்தமதிலைமாற்றார்கொளுமுன்னஞ்செல்வர்க்கிடச் ... *
செப்பத்தமதிலையெங்ஙனுய்வார்தெய்வவேழமுகன் ... *
செப்பத்தமதிலைவாணுதம்ருக்கின்றார்சேனில்வெள்ளிச் ... *
செப்பத்தமதிலைவென்றார்குமாரவத்திக்கரசே ... (௯௰)

திக்கரசத்திகலான்சென்றாமூன்றிதிகுமரர்வந் ... ... *
திக்கரசத்தியிடத்தோயென்செய்வதெனத்தருநீ ... *
திக்கரசத்திவிதிர்த்திலையேயெல்லான்செய்குமாரத் ... *
திக்கரசத்தியலைவாய்வளர்நித்திலக்கொழுந்தே ... ... (௯௧)

திலமுந்தயிலமுநிகரவெங்குந்திகழ்ந்தருசெந் ... ... *
திலமுந்தயிலமுருகாவெனுசத்திநகையிலித் ... ... *
திலமுந்தயிலமுகத்தாலுருகியசிந்தவெவ்வேனே ... ... *
திலமுந்தயிலகலவினைமேவித்தியங்குவதே ... ... (௯௨)

தியங்காப்பொறியுண்டெனுந்தனுத்திரவுமேதினையூர் ... *
தியங்காப்பொறியுண்டைமிவியேயென்றுமேசப்பனுஞ்சத் ... *
தியங்காப்பொறியுண்டயல்கைப்படாததிரவெற்புநீ ... *
தியங்காப்பொறியுண்டைபண்டுய்ப்போர்செய்தசேவகனே ... (௯௩)

சேவகமன்னமலர்க்கோமுன்னீசொலத்தெய்வவள்ளி ... *
சேவகமன்னவதனம்புயகிரிசெற்றமுழுச் ... ... *
சேவகமன்னதிருவாவினன்குடிச்செல்வகல்விச் ... *
சேவகமன்னமுனிக்கெங்ஙனனித்திசைப்புற்றதே ... (௯௪)

திசைப்படங்கப்புயந்தந்தருளாவெனன்படிக்கணிய ... *
திசைப்படங்கைத்தமையார்செந்திலாவொப்படென்னனுய ... *
திசைப்படங்கப்புகல்சேயென்பள்கன்னிகண்ணீர்தரவி... *
திசைப்படங்கத்தமையாதெமையாடகொளுஞ்சீரம்ம ... (௯௫)

சீகரசிந்துரவுத்தவென்றூர்செயபுயவ ... ... *
சீகரசிந்துரவல்லிசிங்காரசிகசுதக ... ... ... *
சீகரசிந்துரகந்தரவாகைசிறைவிடுஞ்சி ... ... *
சீகரசிந்துரமால்வினைக்குன்றைச்சிகண்டிகொண்டே ... (௯௬)

காவலவம்பரிசப்பாடுசெய்யுஞ்செவ்வேலவிலஞ்
காவலவம்பரிஆரார்மதணிந்திலஞ்சலார
காவலவம்பரியங்கங்குழல்பெற்றதமொழிலஞ்
காவலவன்பரியானலமன்றிலுந்தென்றலுமே (௮௧)

தென்றலையம்புபுனைவார்குமாரதிமிரமுந்நீர்த்
தென்றலையம்புயமின்கோமருகசெழுமறைதேர்
தென்றலைப்புசைப்பூசரவெளிசிந்திமன்றற்
றென்றலையம்புபடுநெறிபோயுயிர்தீர்க்கின்றதே (௮௨)

தீராகமசவிகிதபோகமெனத்தெளிந்தார்
தீராகமலமெனக்கருதாததென்செயனூல்
தீராகமலகுகரம்பொறுப்பனெனத்திருக்கன்
தீராகமலமாவேகருகச்சிவந்தவனே (௮௩)

சிவசிவசங்கரவேலாயுததினைஞ்சிகுறிஞ்
சிவசிவசங்கரவாமயில்வீரசெகந்திருக்கண்
சிவசிவசங்கரமாலையெனுந்திறமேலாய்பொறைவா
சிவசிவசங்கரமான்பட்டவாவொளிசேர்ந்தபின்னே (௮௪)

சேந்தமராத்துடர்தானவர்சேனையத்தெண்டிணாக்கண்
சேந்தமராத்துடன்கொன்றசெவ்வேலதிருமுடிமேற்
சேந்தமராத்துடரச்சூடிமைந்ததினைத்தினைத்தென்
சேந்தமராத்துடரின்குறியென்னுமிச்சேறுபுக்கே (௮௫)

சேறலைத்தாறலைக்கப்பாலெழுந்துசெழுங்கமுகிற்
சேறலைத்தாறலைக்குஞ்செந்தில்லாய்சிந்தைதீநெறியிற்
சேறலைத்தாறலைத்தீர்க்குங்குமாரதிரியவினைச்
சேறலைத்தாறலைக்கத்தகுமோமெய்த்திறங்கண்டுமே (௮௬)

திறம்பாடுவார்தன்புனத்தெய்வமேயென்பர்சேதத்துமார்
திறம்பாடுவார்முழுதுநீணைக்காய்பவர்செந்தினைமேல்
திறம்பாடுவரீழுங்கண்டுருகாநிற்பர்செப்புறச்செந்
திறம்பாடுவரிவர்வல்லவர்நெஞ்செயல்கொள்ளவே (௮௭)

செயலங்கைவாளையிறைகோயிலைச்சிவனைமுறைதச்
செயலங்கைவாளைமுனிகொண்டல்வாளியைத்தேவர்பிரான்
செயலங்கைவாளைமுனைவேலையன்னவிச்சேயுறையுஞ்
செயலங்கைவாளையுகள்செந்தில்வாழ்பவள்செல்விழியே (அஅ)

சேலையிலாருந்தவன்சூலமேறச்சினத்தவன்கண்
சேலையிலாருந்திவனேனும்பவையாசிந்திரியச்
சேலையிலாரும்பராபரிபுக்குறச்சிக்கெனுமிச்
சேலையிலாருந்திறையிட்டனர்தங்கள்சித்தங்களே. (அகூ)

சித்தத்தரங்கத்தர்சித்தியெய்தத்தரிகின்றதென்னர்ச்
சிந்தத்தரங்கத்தர்சந்ததியேசெந்திலாய்சலரா
சித்தத்தரங்கத்தரக்கனைச்செற்றகந்தாதிங்களிஞ்
சித்தத்தரங்கத்தர்சேயாரணத்தந்திகிரியையே. (கூய)

திகிரிவலம்புருநாற்கரியார்க்குபதேசஞ்சொன்ன
திகிரிவலம்புரிசெய்யாரிலஞ்சிசெந்தூர்கனகந்
திகிரிவலம்புரிவேறும்படைத்தருள்செய்தணியில்
திகிரிவலம்புரிகுடியவாநன்றுசேடியின்றே. (கூக)

சேடிவணங்குவளைத்தோளெனப்புணர்சேயவட
சேடிவணங்குதிருத்தணிகாவலநின்செருக்காற்
சேடிவணங்குகொடியிடையாளையுஞ்செப்புமுலை
சேடிவணங்குதலைக்களிறீந்ததுசெல்லதில்லை. (கூஉ)

செல்லலையம்பொழில்சூழ்செந்திலான நிபாணிறைகைச்
செல்லலையம்பொழிலெங்கணுமேற்பவெணத்தெறித்த
செல்லலையம்பொழிலங்கைக்கருடிருமாணிறம்போற்
செல்லலையம்பொழிலாகவமாதுயிர்சேதிப்பதே. (கூங)

சேதிக்கவைத்துகளதாக்குநேர்க்கினன்செல்வசெந்திற்
சேதிக்கவைத்துநிலைபெறச்சூரங்கஞ்சிரங்கமால்
சேதிக்கவைத்துவரிதோயயிலகொண்டற்சேர்க்கவந்தார்
சேதிக்கவைத்துவருமாமறலிதிறலினையே. (கூச)

திறலாவணகப்புரிக்கனிக்கக்கிரிநேருநந் ... ... *
திறலாவணசுரமணியைவென்றோன்றிசைத்திருச்செந் ... *
திறலாவணமயிலேலாயரந்தகாலமன்சிந்தைவைத்த ... *
திறலாவணநின்றிருவாணதண்டைத்திருவடியே ... (௯௫)

திருக்கையம்போதிகளோகஞ்சமோநஞ்சமோதிருமால் ... *
திருக்கையம்போசெய்யவேலேவில்லேசனந்தென்னணைந்த ... *
திருக்கையம்போருக்கைநீற்றின்மாற்றிதென்னூர்சிவபத் *
திருக்கையம்போகவுரைத்தோன்சிலம்பிற்சிறுமிதற்கே ...(௯௬)

சிறுமிக்குமாதிகர்வேற்பகிரச்சிதையுயிர்த்துச் ... *
சிறுமிக்குமாரசரணமென்னீருயிர்செந்தினைமேற் ... *
சிறுமிக்குமாரபுணைத்துநின்றோன்சிலைவேட்டுவனேச் ... *
சிறுமிக்குமாரவணிமுடியான்மகம்சீரடிக்கே ... (௯௭)

சீரங்கராகமறமோதுகிரிசெங்கைகொண்ட ... ... *
சீரங்கராகமருகந்தநேசிகசெந்தினைமேற் ... ..... ..... *
சீரங்கராகதனகிரிதோய்கந்தசெந்தமிழ்நூற் ... ... *
சீரங்கராகவிநோதவென்பார்க்கில்லைதீவினையே ... (௯௮)

தீவினையற்றசெவற்றீரகத்தூண்மெய்த்தீபநந்த ... *
தீவினையற்றவநந்தாதெடுத்தணைந்தசெந்தினைமேல் ... ... *
தீவினையற்றபுனமான்கொழுநன்செழுங்கனகத் ... *
தீவினையற்றவடியார்க்கருள்பெருஞ்செல்வனுக்கே ..... (௯௯)

செல்வத்திகழுமலநெஞ்சமேயவன்றெய்வயானையினார் ... *
செல்வத்திகழுநாமத்தின்மைதீர்க்கும்வெங்கூற்றுவற்குச் ... *
செல்வத்திகழ்திருக்கையிலம்பிணைகாத்தசெல்வி ... *
செல்வத்திகழுமணவாளனல்குந்திருவடியே. ... ... (௱)



கந்தரந்தாதி - முற்றிற்று.

உ

முருகன் றுணை.

# திருப்புல்வயல்

# குமரேசசதகம்.

## குருபாததாசர்

அருளிச்செய்தது.

---

இஃது

சைதாப்பேட்டை.

சுப்பராயமுதலியாரவர்களால்

பார்வையிடப்பட்டு.

வளவனூர்,

முத்துசாமிமுதலியாரவர்களது

முத்தமிழ்விளக்கஅச்சுக்கூடத்திற்

பதிப்பிக்கப்பட்டது.

சித்தார்த்தி௵—சித்திரை௴

திருச்சிற்றம்பலம்.

# குமரேசசதகம்.



## காப்பு.

பூமேவுபுல்லைப்பொருந்துகுமரேசர்தம்மேல் ... ... ... *
தேமேவியசதகஞ்செப்பவே - கோமேவிக் ... , ... ... *
காக்குஞ்சரணவத்தான்சம்பகும்பத்தைத்தகரக் ... ;.. *
காக்குஞ்சரணவத்தான்காப்பு ... ... ... ... ... *

## (அவையடக்கம்.)

மாரிக்குநிகரொன்றுபனிசொரிதல்போலவுமனைக்குநிகரொன்றுசிறுபெண்.
மணல்வீடுகட்டுவதுபோலவுஞ்சந்திரன்முன்மருவுமின்மினிபோலவும்*
பாருக்குநல்லோர்முனேபித்தர்பலமொழிபகர்ந்திடுஞ்செயல்போலவும்
பச்சைமயிலாடுதற்கிணையென்றுவான்கோழிபாரிலாடுதல்போலவும் ... *
பூரிக்குமினியகாவேரிக்குநிகரொன்றுபோதுவாய்க்கால்போலவும் .. .. *
புகல்சிப்புமுத்துக்குநிகராப்பளிங்கைப்பொருந்தவைத்ததுபோலவும்.*
வாரிக்குமுன்வாவிபெருகல்போலவுமின்சொல்வாணர்முனுவகந்துபுல்லை *
வாலகுமரேசர்மேற்சதகம்புகன்றனன்பணம்பொறுத்தருள்புரிகவே ...*

## (குமரேசர்மகிமை.)

பூமிக்கொராறுதலையாய்வந்துசரவணப்பொய்கைதனில்விளையாடியும்...*
புனிதற்குமந்த்ரவுபதேசமொழிசொல்லியும்போதனைச்சிறையில்வைத்து
ம்,சேமிக்கவரிகாட்பிரமாதிகட்குஞ்செகுக்கமுடியாவசுரனைத் ... ...*
தேசங்கிழித்துவடிவேலினாலிருகூறுசெய்தமரர்சிறைதவிர்த்தும்... ...*
நேமிக்குளன்பரிடருற்றசமையந்தனினினைக்குமுன்வந்துதவியும்......*
நிசமுமெய்த்துணையாய்விளங்கலாலுலகிலுனைநிகரானதெய்வமுண்டோ.*
மாமிக்கதேன்பெருகுபூங்கடம்பணியுமணிமார்பனேவள்ளிகணவா.....*
மயிலேறிவிளையாடுகுகனேபுல்வயனீடுமலைமேவுகுமரேசனே... ...(௧)

## (அந்தணரியல்பு.)

குறையாதகாயத்ரியாதிஜெபமகிமையுங்கூறுசுருதிப்பெருமையும்...,...*
கோதிலாவாகமபுராணத்தின்வளமையுங்குலவுயாகாதிபலவும்... ... *
முறையாநடத்தலாற்சகலதீவினைகளையுமுனிபோலேதகிப்பார்.... [பார்
முதன்மைபெறுசிலசெம்புபிருதுவிகளிற்றெய்வமூர்த்தமுண்டாக்குவிப்
திறையாகநீதிநெறிவழுவார்களாகையாலீண்மழைபொழிந்திடுவதும்...*

நிலமதுசெழிப்பதும்மரசர்செங்கோல்புரியுநிலையுமாதவர்செய்தவமும் *
மறையோர்களாலேவிளங்குமிவ்வுலகத்தின்மானிடத்தெய்வமிவர்காண்.. *
மயிலேறிவிளையாடுகுகனேபுல்வயனீமலைமேவுகுமரேசனே... ...(உ)

(அரசரியல்பு.)

குடிபடையிலபிமானமந்திராலோசனைகுறிப்பறிதல்சத்யவசனம்... ...*
கொடைநித்தமவரவர்க்கேற்றமரியாதைமுறைகோடாதசதுருபாயம் *
படிவிசாரணையொடுப்ரதானிகளகர்த்தனாப்பண்டிதர்ந்தேயமைத்தல்...*
பல்லுயிரெலாந்தன்னுயிர்க்குநிகரென்றுபரித்தல்குற்றங்கள்களைதல் ...*
துடிபெறுதனக்குறுதியானநட்பகமின்மைசுரணையொடுகலவியறிவு ...*
தோலாதகாலமிடமறிதல்வினைவலிகண்டுதுஷ்டநிக்ரகசௌரியம் .. ...*
வடிவுபெறுசெங்கோனடத்திவருமரசர்க்குவழுவாதமுறைமையிதுகாண்..
மயிலேறிவிளையாடுகுகனேபுல்வயனீமலைமேவுகுமரேசனே ... ...(ங)

(வணிகரியல்பு.)

கொண்டபடிபோலும்விலைபேசிலாபஞ்சிறிதுகூடிவரநயமுரைப்பார். *
கொள்ளுமொருமுதலுக்குமோசம்வராதபடிகுறுகவேசெலவுசெய்வார்*
வண்டப்புரட்டர்தாமறிதந்துபொன்னடகுவைக்கினுங்கடனீந்திடார்...*
மருவுநாணயமுளோர்கேட்டனுப்பினுமவர்வார்த்தையிலெலாங்கொடுப்
பார்,நண்பெழுதுபற்றுவரவினின்மயிர்பிளந்தேகணக்கிலணுவாகிலும்வி
டார்,காகவீணிற்செலவிடார்ருசிதமானதிற்கனதிரவியங்கள்விடுவார்... . *
மண்டலத்தூடுகனவர்த்தகஞ்செய்கின்றவணிகர்க்குமுறைமையிதுகாண். *
மயிலேறிவிளையாடுகுகனேபுல்வயனீமலைமேவுகுமரேசனே... ...(ச)

(வேளாளரியல்பு)

நல்லதேவாலயம்பூசைநடப்பதுநாட்டாறுமழைபொழிவதும்......,...*
நாடியதபோதனர்கண்மாதவப்புரிவதுநவில்வேதவேதியரெலாம்... ...*
சொல்லரியயாகாதிகன்மங்கள்செய்வதுந்தொல்புவிசெழிக்குநலமும் ...*
சுபசோபனங்களுங்கொற்றவர்கள்செங்கோறுலங்குமனுநெறிமுறைமை
யும்,வெல்லரியசூத்ரர்தமொடுவர்த்தகர்கொள்விலையும்விற்பனையுமதிகபுக
ழும்,மிக்கவதிகாரமுந்தொழிலாளர்சீவனமும்வீரரணசூரவலியும்... ...*
வல்லமைகள்சகலமும்வேளாளர்மேழிபின்வாழ்வினால்விளைவவன்றோ. *
மயிலேறிவிளையாடுகுகனேபுல்வயனீமலைமேவுகுமரேசனே ... ...(ரு)

(பிதாக்கள்.)

தவமதுசெய்தேபெற்றெடுத்தவன்முதற்பிதாதனைவளர்த்தவனொருபிதா.*
தயைபாகவித்தைதனைச்சாற்றினவனொருபிதாசார்ந்தசற்குருவொருபிதா.*
அவமறுத்தாள்கின்றவரசொருபிதாநலவாயத்துவேளாதமனில ... ...*
அஞ்சலென்றரியபயந்தீர்த்துளோனொருபிதாவன்புளமுன்னோனொருபிதா

கவளமிடுமனைவியைப்பெற்றுளோனொருபிதாகலிதவிர்த்தவனொருபிதா*
காசினியிலிவர்களைத்தம்பிதாவென்றுளங்கருதுவதுநீதியாகும்... ...*
மாவலிசனிக்குமதியரவுபுனைவிமலருந்தவுசிறுமதலையெனவருகுருபரா ... *
மயிலேறிவிளையாடுகுகனேபுல்வயனிமலைமேவுகுமரேசனே ... ...(௬)

(ஒன்றையொன்றுபற்றியிருப்பன.)

சத்தியந்தவறாதிருப்பவரிடத்தினிற்சார்ந்துதிருமாதிருக்கும்... ... *
சந்ததந்திருமாதிருப்பவரிடந்தனிற்றனதுபாக்கியமிருக்கும் ... ...*
மெய்த்துவருபாக்கியமிருக்குமவரிடந்தனின்மிக்கானவித்தையிருக்கும் ..*
வித்தையின்கலைபூண்டிருக்குமவரிடந்தனின்மிக்கானதயையிருக்கும் ....*
பத்தியுடனினியதயையுள்ளவரிடந்தனிற்பகர்தருமமிகவிருக்கும்... ...*
பகர்தருமமுள்ளவரிடந்தனிற்சத்துருபலாயனத்திறலிருக்கும் ... ...*
வைத்திசையிகுந்ததிறனுள்ளவரிடத்தில்வெகுமன்னுயிர்சிறக்குமன்றோ*
மயிலேறிவிளையாடுகுகனேபுல்வயனிமலைமேவுகுமரேசனே ... (௭)

(இவர்க்கிவர்தெய்வமெனல்.)

ஆதுலர்க்கன்னங்கொடுத்தவர்களேதெய்வமன்பானமாணாக்கருக் ... ...*
கரியகுருவேதெய்வஞ்சிறந்தோர்க்காபத்தகற்றினோனேதெய்வமாம்......*
காதலுறுகற்புடையமங்கையர்தமக்கெலாங்கணவனேமிக்கதெய்வம் ... *
காசினியின்மன்னுயிர்தமக்கெலாங்குடிமரபுகாக்குமன்னவர்தெய்வமாம்...
ஓதரியபிள்ளைகட்கன்னைதந்தையர்தெய்வமுயர்ஜாதிமாந்தர்யார்க்கும் ... *
உறவின்முறையார்தெய்வம்விசுவாசமுள்ளபேர்க்குற்றசிவபத்தர்தெய்வம்.
மாதயையினற்சூத்திரர்க்குமறையோர்தெய்வம்மானவர்க்குத்தெய்வம்நீ..*
மயிலேறிவிளையாடுகுகனேபுல்வயனிமலைமேவுகுமரேசனே .. ...(௮)

(இவர்க்கிந்நினைவெனல்.)

ஞானநெறியாளர்க்குமோக்ஷத்திலேநினைவுநல்லறிவுளோர்தமக்கு... ...*
நாடோறுந்தருமத்திலேநினைவுமன்னர்க்குராச்சியந்தனினினைவு......*
ஆனகாமுகருக்குமாதர்மேலேநினைவுளஞ்சாததிருடருக்கிங்... ... ...*
கனுதினங்களவிலேநினைவுதனவணிகருக்காதாயமீதுநினைவு... ... ...*
தானமிகுகுடியாளருக்கெலாம்வேளாண்மைதனினினைவுகற்பவர்க்குத்...*
தருகல்விமேனினைவுவேசியர்க்கினியபொருடருவோர்கண்மீதுநினைவு...*
மானபரனுக்குமரியாதைமேனினைவெற்குமாறாதுன்மீதுநினைவு ... ...*
மயிலேறிவிளையாடுகுகனேபுல்வயனிமலைமேவுகுமரேசனே...... (௯)

(இவர்க்கிதுவில்லையெனல்.)

வேசைக்குநிசமில்லைதிருடனுக்குறவில்லைவேந்தர்க்குநன்றியில்லை ... ...*
மிடியற்குவிலைமாதர்மீதுவங்கணமில்லைமேலைச்சற்குதீனறயதில்லை ..: ...*
ஆசைக்குவெட்கமில்லைஞானியானவனுக்குளகமில்லைமூர்க்கன்றனக்... ...*

கன்பில்லாமிக்குறையில்லைதுணைவிலோர்க்குநகில்லைசித்தசுத்தன் ... *
பூசைக்குநவிலங்கசுத்தியில்லையாவுமுணர்புலவனுக்கயலோரில்லை ... ... *
புல்லனுக்கென்றுமுசிதானுசிதமில்லைவருபுலையர்க்கிரக்கமில்லை ..... .. *
மாசைத்தவிர்த்தமதிமுகதெய்வயானையொடுவள்ளிக்கிசைந்தவழகா ... *
மயிலேறிவிளையாடுகுகனேபுல்வயனீடுமலைமேவுகுமரேசனே ... ...(ய)

(இப்படிப்பட்டவரிவரெனல்.)

நியாயநெறிதவறாமனுலகபரிபாலனநடத்துமவனேயரசனும் ... ... *
ராஜனேஜனைதெரிந்துரிதியாகியசெய்திநவிலுமவனேமந்திரி ... ....*
நேசமுடனேதன்சரீரத்தையெண்ணாதநிர்வாகியேசூரனும் ... ... *
நிலைபெறுமிலக்கணமிலக்கியமறிந்துசொலுநிபுணகவியேகவிஞனும்...*
ஆயதொருவாகடந்தாதுவினிதானமுமறியுமதியோனவயித்தியன் ...*
அகமின்றிமெய்யுணர்ந்தைம்புலனொழித்துவிட்டவனே மெய்ஞ்ஞானி
யெனலாம்,மாயவர்சகோதரிமகிழ்ஞானமணிக்கல்பாணவரபுத்ர வடிவேலவா.
மயிலேறிவிளையாடுகுகனேபுல்வயனீடுமலைமேவுகுமரேசனே ... (யக)

(விசாரந்தடக்கத்தருவனவிவையெனல்.)

அக்கினியைவாய்மூந்து அர்ச்சுனனா லஞ்சடினையாளவளர் உயிர்கொள்களை
யை,அஞ்சாவிரோதிகளையனியாயமுடையோரையகத்தியப்பெண்களார்ப்
பைக், கைக்கினியதொழிலாளியைக்கொண்டவடிமையைக்களவுசெய்யுந்தி
ருடரைக்,கருதியவிசாரத்தையடக்கமில்பவிஷயைக்கடிதானகோபந்தனை
மெய்க்கினிதலாப்பிணியை யவையதாகீனத்தை வினைமூண்டிடுஞ் சண்டை
யை,விஷமேறுகோரத்தையடக்குவதலான்மிஞ்சவிடலாகாதுகாண்.*
மைசகினியகண்ணிகுறவள்ளிதெய்வானையைமணஞ்செய்தபேரழகனே..*
மயிலேறிவிளையாடுகுகனேபுல்வயனீடுமலைமேவுகுமரேசனே......(யஉ)

(இவர்க்கிது அரும்பெனல்.)

தாராளமாகக்கொடுக்குந்தியாகிகட்கு நற்பொருடுரும்பு ... ... *
தன்னுயிரையெண்ணாதசூரனுக்கெதிராளிதளமெலாமொரு துரும்பு ...*
பேரானபெரியருக்கற்பர துணையினிற்பிரயோசனந்துரும்பு ... ...*
பெரிதானமோக்ஷசிந்தனையுள்ளவர்க்கெலாப்பெண்போகமொருதுரும்பு
தீராதசகலமும்வெறுத்த துறவிக்குவிரல்சேர்வேந்தனொருதுரும்பு ... *
செய்யகலைநாமகள்கடாக்ஷமுள்ளோர்க்கெலாஞ்செந்தமிழ்க்கவி துரும்பா
ம்,வாராருமணிகொண்முலைவள்ளிதெய்வானையை மணம்புணரும்வடிவேல
வா,மயிலேறிவிளையாடுகுகனேபுல்வயனீடுமலைமேவுகுமரேசனே....(யா)

(இதனைவிளக்குவதிதுவெனல்.)

பகல்விளக்குவதிரவிநிசிவிளக்குவதுமதிபார்விளக்குவதுமேகம் ... ... *
பதிவிளக்குவதுபெண்குடிவிளக்குவதரசுபாரிவிளக்குவதுவேகம் ... ...*

